# திருக்கோயில்

"என்கடன் பணி செய்து கிடப்பதே"





மாணிக்கவாசகர்

மாலை 10] கிலக - ஆடி - ஆகஸ்ட், 1968 [மணி 11

சென்னை அரசாங்க அறநிலையப்




உபய வேதாந்த மகாவித்துவான் ஸ்ரீஜகதாசார்ய சிம்மாசனாதிபதி காஞ்சிபுரம் **ஸ்ரீமத் பி. ப. அண்ணங்கராசார்ய சுவாமிகள்** அவர்களுக்கு, இந்தியப் பேரரசு "பத்மபூஷண்" என்னும் உயர்ந்த பட்டத்தினை வழங்கிச் சிறப்பித்தது (16—4—68). அதனைத் தமது உடல்நலிவு காரணமாக, அவர்கள் டெல்லிக்குச் சென்று, குடியரசுத் தலைவரிடமிருந்து நேரிற் பெற முடியாமற்போயிற்று. ஆதலின் இந்தியப் பேரரசின் சார்பில், நமது அறநிலைய அமைச்சர் மாண்புமிகு **நாவலர் இரா. நெடுஞ்செழியன் M.A.,** அவர்கள், சென்னையில் தமிழக அரசின் தலைமைச் செயலகத்தில், மகாவித்துவான் ஸ்ரீமத் பி. ப. சுவாமிகள் அவர்களை வருவித்து, ஷி பட்டத்திற்குரிய விருதினை வழங்கிச் சிறப்பித்தார்கள் (21—6—68). அதுபோது, நமது அறநிலைய அமைச்சர் அவர்களும், அண்ணங்கராசாரிய சுவாமிகள் அவர்களும், அளவளாவி மகிழும் காட்சி.

—ஆசிரியர்.

## பொருளடக்கம்


1. திருவாசகத் தேன்
2. இராமாநுசரின் இனிய அருளுரைகள்
3. வியத்தகு வேண்டுகோள்
4. "மயில் ஏறும் இராவுத்தன்"
5. அப்பர் என்னும் சொற்பொருள்
6. கொங்கு நாட்டுத் தலங்கள்
7. திருப்பாவைச் செழும் பொருள்
8. மகாபாரதம்
9. சமய இலக்கியம்
10. முருகன் பெருமை
11. ஸ்ரீ ராமாயண ரசப்பிரவாகம்


## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

**ஆண்டுச் சந்தா ரூ. 10/-** — **தனி இதழ் விலை ரூ. ஒன்று**

'திருக்கோயில்' இதழின் சந்தாதாரர்கள் ஆகச் சேர விரும்புபவர்கள், "திரு. ஆணையர் அவர்கள், அறநிலைய ஆட்சித்துறை, சென்னை-34" என்னும் முகவரிக்கு ரூபா பத்து அனுப்பி, எப்போது வேண்டுமாயினும் சந்தாதாரர்கள் ஆகச் சேர்ந்து கொள்ளலாம்.

அல்லது, அவ்வவ் வட்டார அறநிலைய உதவி ஆணையாளர்களின் அலுவலகங்களிலும், மேற்படி சந்தாத் தொகையைச் செலுத்திச் சேரலாம்.

சந்தாதாரர்கள் தங்களுடைய சரியான முழு முகவரியைத் தெரிவித்துதவுதல், இதழ்கள் தவருமற் சேர்தற்கு மிகவும் இன்றியமையாதது.

—ஆசிரியர்.

# திருக்கோயில்

திங்கள் வெளியீடு

மாலை 10] கீலக - ஆடி - ஆகஸ்டு, 1968 [மணி 11


## "திருவாசகத் தேன்"

**முன்னுரை :**

"திருவாசகமானது, அழகிய இனிய பாடல்களில், அறியாமை பேரவா முதலிய அடிமைத்தளைகளினின்று விடுபட்டு, அன்பு அறிவு என்பனவற்றின் உரிமை பெற்று, முறை முறையே வளர்ந்து செல்லுகின்ற உயிரின் முன்னேற்றப் படிநிலைகளை நன்கினிது விளங்கக் காட்டுகின்றது.

உயிரின்பால் முதன்முதலாக உணர்வுக் கண்கள் திறக்கப்பெறுதல், அதனாற் பிறக்கும் உவகை, பெருமிதம், பலவகை மனநிலை அலைவுகள், கையறவு, உலகியலில் நின்று தடுமாறும் உணர்ச்சியியற் போராட்டம், அமைதியின்மை, இறுதியாக இறைவனை அடைக்கலம் புகுந்து எய்தும் அமைதி நலம், இறைவனோடு இரண்டறக் கலந்து ஏகனாகி இறைபணி நிற்கும் பெருமகிழ்ச்சி யுணர்வு, என்னும் பலதிற அனுபவ நிலைகளும், திருவாசகத்தின்கண் பளிங்கெனச் சுடரொளி வீசி விளங்குகின்றன" (1).

(1) "Tiruvasagam depicts in beautiful hymns the progress of the soul from the bondage of ignorance and passion into the liberty of light and love, its first awakening, its joy and exalation, waywardness and despondency, struggle and unrest, the peace and the joy of union."

—Dr. S. Radhakrishnan.

**'ஞான நாடகம்' :**

மாணிக்க வாசகர் தமிழகத்தின் தலை சிறந்த ஞானத் தவநிலைச் சான்றோர்! ஞான நன்னெறி கடைப்பிடித்து இறையருட்பேறு எய்திய நற்பெருஞ் சான்றோர்கள் பலருள்ளும், மணிவாசகர்க்குப் பெருஞ் சிறப்பும் முதன்மையும் உண்டு.

"ஊனை நாடகம் ஆடு வித்தவா
உருகி நான்உனைப் பருக வைத்தவா
ஞான நாடகம் ஆடு வித்தவா
நைய வையகத் துடைய விச்சையே"

என மணிவாசகர், தாமே தம் திருவாசகத்திற் பாடுவதுபோல, மணிவாசகரின் வாழ்க்கையை, ஒரு பெரும் 'ஞான நாடகம்' என நாம் குறிப்பிடுதல் கூடும்.

"நான் தனக்கு அன்பின்மை
நானும் தானும் அறிவோம்;
தான் என்னை ஆட்கொண்டது
எல்லாரும் தாம் அறிவார்"

என்றதற்கு ஏற்ப, ஞான வாழ்க்கை நாடகத்தில் இறைவனுக்கும் மணிவாசகர்க்கும் இடையே நிகழ்ந்த உரையாடல்(Dialogue) என்னும்படி, ஒருவகையில் திருவாசகம் அமைந்திருக்கின்றது என்று கூறுதலும் பொருந்தும்.

**'கண்டவர் விண்டனர்' :**

மணிவாசகரின் திருவாசகம், ஒப்புயர் வற்றதொரு சிறந்த கவிதை நூல்! "ஒரு சிறந்த கவிதையானது கவிஞனின் அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டு தோன்றி, அவ்வனுபவத்தைப் பிறரும் ஓரளவு உணர்ந்து அடையுமாறு செய்விக்கவல்ல கருவியாகத் திகழும்'' என அறிஞர்கள் கூறுவர். சங்ககாலப் பெருங் கவிஞர்களும் பிறரும், ஐம்பொறி அளவிற்கு உட்பட்ட அகப்பொருள்–புறப்பொருள் பற்றிய செய்திகளையும், அனுபவங்களையும் பற்றி மட்டுமே, பாடிச் சென்றனர். ஆனல் மணிவாசகரோ, ஐம்பொறி உணர்வுகட்கு அப்பாற்பட்ட, கடவுட் பொருளின் அருள் அனுபவ நலங்களை அறிந்தும் நுகர்ந்தும், அழகொழுகும் இனிய கவிதைகளில் திருவாசகமாக அருளிச் செய்துள்ளார். 'கண்டவர் விண்டிலர்; விண்டவர் கண்டிலர்' என்னும் பழமொழியைப் பொய்யாக்கி, இறைவனைக் கண்டதுடன், அவனது அருள்மாட்சிமைகளை நாம் வியந்தினிது மகிழும் வண்ணம் விண்டு மொழிந்தருளியவர் மணிவாசகர்!

"கண்ணால் யானும் கண்டேன் காண்க
அருள்நனி சுரக்கும் அமுதே காண்க.
கருணையின் பெருமை கண்டேன் காண்க
சிவன்என யானும் தேறினன் காண்க
புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
அவன்எனை ஆட்கொண்டு அருளினன் காண்க
குவளைக் கண்ணி கூறன் காண்க''

எனவரும் திருவாசகப் பகுதி, இவ்வுண்மையைச் செவ்விதின் வலியுறுத்தி நிற்றல் காணலாம். 'இங்ஙன் இருந்தது என்று எவ்வண்ணம் சொல்லுகேன்; அங்ஙன் இருந்ததென்று உந்தீபற; அறியும் அறிவு அது அன்று உந்தீபற'' என்றபடி, பிறருக்கு எடுத்துச் சொல்லுவதற்கும் எழுதிக் காட்டுதற்கும் இயலாத பேரின்ப அருளனுபவ நலங்களை, நம்மனோர்க்கு எடுத்துச் சொல்லியும், எழுதிக் காட்டியும் விளக்குவது திருவாசகம் எனலாம்.

**திருவண்டப் பகுதி :**

மணிவாசகப் பெருமான், திருப்பெருந்துறையில் குருந்த மர நிழலில் இறைவனால் திருவைந்தெழுந்து மந்திரம் செவியறிவுறுத்தி ஆட்கொள்ளப் பெறும் பேறு எய்திய பிறகு, தாம் பெற்ற சிவானுபவத் திறங்களைத் திருவண்டப்பகுதி என்னும் அகவலில், பின்வருமாறு அழகுற விளக்கியருள்கின்றார் :

"இறைவன் எனக்குத் தடக்கையின் நெல்லிக்கனி ஆயினன். அவன் என்பாற் செய்த பேரருட்டிறனை, யான் சொல்லும் வகையறியேன். நாயை ஒத்தவனான அடியேன், அவ்வருட் பேரின்பத்தினைத் தாங்குதற்கு இயலாதுள்ளேன். அவன் எனக்கு அருள் செய்தது எற்றுக்கு என்பதும் எனக்குத் தெரியவில்லை. இறைவன் அருளிய பேரின்பத் தேறலை யான் குடித்தும் நிறைவு பெறேன், விழுங்கியும் பொறுத்துக் கொள்ள மாட்டேன். செழுந்தண் பாற் கடலின் அலைகளைப் போல, மிகத் தூயதும் மேன்மேற் பொங்கி வழிவதும் ஆகிய பேரின்பம், அவனால் எனக்குக் கிடைத்தது. நிறைநிலாக் காலத்தில் கடலின் நடுவில் உள்ள நீரைப்போல, சொல்லின் எல்லையைக் கடந்த பேரின்ப அமிழ்தமானது, என் உள்ளமெல்லமாம் முழுவதும் ததும்பி, மயிர்க்கால் தோறும் தேக்கிடுமாறு அவன் செய்து விட்டனன்! நாய் போன்ற சிறுமையையுடைய என் உடம்பினுள்ளே இறைவன் எழுந்தருளிச் சிறு வீடு அமைத்துக் கொண்டான்; கொடியவன் ஆகிய எனது ஊன் மிகுந்த உடம்பெல்லாம் இனிய தேனைப் பாயச் செய்தான்; யான் இதற்குமுன் அறியப் பெறாத புதுமைமிக்க அமுத ஒழுக்கினை, எனது எனது என்புத் துளைகளிலெல்லாம் ஏறும்படி செய்தான். உருகும் இயல்பிற்றாகிய உள்ளத்தினையே ஒரு வடிவமாகச் செய்ததுபோல, எனக்கு முழுவதும் உருகும் உடம்பை அமைத்து வைத்தான். ஒன்றுக்கும் பற்றாத என்னையும், மதக்களிப்பு மிக்க ஆண்யானைபோலே, மிக மேலான பேரின்பத்தில் நிலைபெற்றிருக்குமாறு செய்து விட்டான்''.

"தடக்கையின் நெல்லிக் கனிஎனக்கு ஆயினன்!
சொல்லுவ தறியேன் வாழி! முறையோ?
தரியேன் நாயேன் தான்எனைச் செய்தது
தெரியேன், ஆவா செத்தேன்; அடியேற்கு

அருளியது அறியேன் பருகியும் ஆரேன்
விழுங்கியும் ஒல்ல கில்லேன்;
செழுந்தண் பாற்கடல் திரைபுரைவித்து
உவாக்கடல் நள்ளுநீர் உள்ளகம் ததும்ப,
வாக்கிறந்து அமுதம் மயிர்க்கால் தோறும்
தேக்கிடச் செய்தனன்; கொடியேன் ஊன்தழை
குரம்பை தோறும் நாயுடல் அகத்தே
குரம்பைகொண்டு இன்தேன் பாய்த்தி நிரம்பிய
அற்புதம் ஆன அமுத தாரைகள்
எற்புத் துளைதொறும் ஏற்றினன்; உருகுவது
உள்ளம் கொண்டு, ஓர் உருச்செய் தாங்குஎனக்கு
அள்ளூறு ஆக்கை அமைத்தனன்; ஒள்ளிய
கன்னற் களிதேர் களிறெனக் கடைமுறை
என்னையும் இருப்ப தாக்கினன்; என்னிற்
கருணை வான்தேன் கலக்க
அருளொடு பராவமுது ஆக்கினன்"

மணிவாசகரின் சிவாநுபவ ஞானச் செய்திகளை மேலே எடுத்துக்காட்டிய, இத்திருவாசகப் பகுதியானது சிறப்புற இனிது விளக்குதல் காணலாம்.

**'அண்டத்து அரும்பெறல் மேகன்' :**

மாணிக்கவாசகர், இறைவன் தமக்கு மிகவும் தண்ணளியோடு எளிவந்து, தம் பாற் சிவானந்தம்ஆகிய பேரின்ப மாரியினை, வரையா வண்மையிற் கைம்மாறு கருதாமல், தனது பேரருட் பெருந்தகைமையாற் பெரிதும் வழங்கிப் பொழிந்தனன் ஆகலின், இறைவனை 'அண்டத்து அரும் பெறல் மேகன்' என விதந்து மகிழ்ந்துரைக்க விரும்புகின்றார். அக்கருத்தினைத் தமது நுண்மாண் நுழைபுலம் தோன்றவும், உணர்ச்சி நலமும் கற்பனைவளமும் பொலியவும், அழகுற உருவகம் செய்து பின்வருமாறு அவர் பாடுகின்றார்:

"மிக மேலான இன்பப் பழங்கடல் என விளங்கும் சிவபரம்பொருள், கரிய பெரிய **முகில்** போலத் தோன்றி, திருப்பெருந்துறை என்னும் மலையின்மீது ஏறி, விந்து தத்துவம் ஆகிய **மின்னல்** ஒளியினை எல்லாத் திசைகளிலும் பரவுமாறு செய்து, ஐம்புல அவாக்கள் ஆகிய **பாம்புகள்** இரிந்து ஓடவும், உலகியல் துன்பங்கள் ஆகிய **கோடைகால** வெம்மை ஒழியவும், அருள்**மழை**யினைப் பொழிந்தது.

அதுபோது நாததத்துவம் ஆகிய பறையை அறைந்தாற்போல, அஃது **இடி** முழக்கம் செய்தது. அங்ஙனம் மின்னியும் இடித்தும் மழை பொழிந்த நிலையில் **இந்திரகோபம்** என்னும் பூச்சிகள், உயிர்களின் அளவில்லாத பிறவிகளைப்போல மிகுத்துக் காணப்பட்டன. கார்காலத்திற்குரிய **தோன்றி** மலர்கள் பூப்பதுபோல, சிவபரம்பொருளின் 'அஞ்சல்' என்ற திருக்கை விளங்கியது. **காந்தள்** மலர்களைப் போல, அடியார்களின் கூப்பிய கைகள் திகழ்ந்தன. அருளாகிய **வெள்ளம்**,இன்பம் ஆகிய **சுழி**களைச் சுழலவிட்டுக் கொண்டு, பெருக்கெடுத்து ஓடுகின்றது.

இவ்வருள் வெள்ளத்தின் நீரைத் தலைப்பட்டுப் பருகுதற்குத் தவப்பேறு ஒருசற்றும் வாய்க்காத பேதை உயிர்கள் ஆகிய **மான்கூட்டங்கள்**, பிறவித்துன்பமாகிய **நீர் விடாய்** மேற்கொண்டு, அறுவகைப் புறச்சமயங்களாகிய **கானல்நீரினை** உண்மை நீர் என்று மயங்கி, அலைந்து திரிந்து வருந்துகின்றன.

இந்நிலையில் அருள்வெள்ளமானது பெருகுதலால், மலப்பிணிப்பு ஆகிய பந்தம் என்னும் ஆற்றின் **கரைகள்**, இருபுறத்தும் இடிந்து சிதைந்து அழிகின்றன. இருவினைகளாகிய **மாமரங்கள்**, வேரோடு வீழ்த்தப்படுகின்றன. இவ்வருள் வெள்ளத்தினை, அடியார்கள் தங்கள் உள்ளமாகிய பெரிய குளங்களில் நிரப்பிக் கொள்கின்றனர்.

அங்ஙனம் நிரப்பிக் கொண்ட அடியார்களாகிய **உழவர்கள்**, வழிபாடு என்னும் **வயல்**களில், அன்பு என்னும் விதையினை விதைத்து, பேரின்பமாகிய **பயிர்** நன்கு விளையும்படி செய்து, சிவபோகமாகிய சிறந்த **விளைவு** நலனை நிரம்பத் துய்த்து மகிழ்கின்றனர். இங்ஙனம் அருச்சனை வயலில், அன்பு விதை விதைத்துத் தொண்டர்களாகிய உழவர்கள், பேரின்பம் ஆகிய பயிர் விளையும்படி செய்து, சிவபோகம் என்னும் நுகர்ச்சியை நிரம்பத் துய்த்து

மகிழும்படி அருளிச் செய்த, அண்டத்து அரும்பெறல் மேகம் போன்றவனுகிய சிவ பெருமான் நீடு இனிது வாழ்க!

"பரமா னந்தப் பழங்கடல் அதுவே
கருமா முகிலில் தோன்றித்
திருவார் பெருந்துறை வரையில் ஏறித்
திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய
ஐம்புலப் பந்தனை வாள் அரவு இரிய
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப
நீடெழில் தோன்றி வாள்ஒளி மிளிர
எந்தம் பிறவியிற் கோபம் மிகுத்து
முரசு எறிந்து;
மாப்பெருங் கருணையின் முழங்கிப்
பூப்புரை அஞ்சலி காந்தள் காட்ட
எஞ்சா இன்னருள் நுண்துளி கொள்ளச்
செஞ்சுடர் வெள்ளம் திசைதிசை தெவிட்ட
வரையுறக்
கேதக் குட்டம் கையற ஓங்கி;
இருமுச் சமயத்து ஒருபேய்த் தேரினை
நீர்நசை தரவரும் நெடுங்கண் மான்கணம்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாபம் நீங்காது அசைந்தன;
ஆயிடை வானப்பேர் யாற்று அகவயிற்
பாய்ந்தெழுந்து இன்பப் பெருஞ்சுழி
கொழித்துச்
சுழித்தெம் பந்தமாக் கரைபொருது
அலைத்திடித்து
ஊழ்ஊழ் ஓங்கிய நாங்கள்
இருவினை மாமரம் வேர்பறித்து எழுந்து;
உருவ அருள்நீர் ஓட்டா அருவரைச்
சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ்
வெறிமலர்க் குளவாய் கோலி நிறைஅகில்
மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள மேன்மேல் மகிழ்தலின் நோக்கி
அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்
தொண்ட உழவர் ஆரத் தந்த
அண்டத்து அரும்பெறல் மேகன் வாழ்க.

திருவாசகத்தில் 'திருவண்டப் பகுதி' என்னும் அகவலின்கண் (66—95) வரும் இவ்வரிகள், எழில் நலம் கனிந்து, 'இயைபு முற்றுருவகம்' என்னும் அணியாக, இன் சுவை பெருக வருதல், தேன் என இனிக் கும் திருவாசகத்தின் இலக்கியத்திறனை, விளக்கப் போதிய சான்ருகும்.

இத்துணை நீண்ட விரிவான, இனிய சிறந்த உருவகக் கற்பனை (Sustained Metaphor) ஒன்றினை, நாம் நம் தமிழிலக் கியங்களில் யாண்டுமே காண்டல் இய லாது. மணிவாசகர் வெறும் அடியவர் மட்டுமே யல்லர்; சிறந்த பெருங்கவிஞரும் செந்நாப் புலவரும் ஆவர்.

"ஐந்திணை யுறுப்பின் நாற்பொருள் பயக்கும்
பைந்தமிழ் நவின்ற செந்நாப் புலவன்"

எனத் தமிழ்ப் பெருஞ் சான்ருேர்களுள் தலைசிறந்த ஒருவராகிய குமரகுருபர அடி களார், தாம் இயற்றிய சிதம்பர மும்மணிக் கோவை என்னும் நூலின்கண், மணிவாச கரின் செந்நாப் புலமை மாட்சிமையினைத் திறன்தெரிந்து புகழ்ந்து போற்றியிருத்தல் காணலாம்.

## தொகுப்பு நூல்:

திருவாசகம் ஒரு தனி நூல் என நம்மிற் பலர் நினைப்பர். ஆனல் அதனைத் தனித் தனியே அமைந்த பல நூல்கள் ஒருங்கு திரண்ட, ஒரு சிறந்த தொகுப்புநூல் என வும் சொல்லலாம். பல்வேறு வகையான பாடல் வகைகளும், வெவ்வேறு திற இலக் கண அமைப்புடைய திருவெம்பாவை—திரு வம்மானை—திருப்பொற்சுண்ணம் — திருக் கோத்தும்பி—திருத்தெள்ளேணம் —திருச் சாழல்— திருப்பூவல்லி —திருவுந்தியார்— திருத்தோள் நோக்கம்-திருப்பொன்னூசல் —அன்னைப்பத்து—குயிற்பத்து — திருத்த சாங்கம்—திருப்பள்ளியெழுச்சி என்னும் பற்பல பனுவல் வகைகளும், திருவாசகத் தின் கண் அமைந்திருக்கக் காண கின்ருேம்.

சிவபுராணமும், போற்றித் திருவகவலும் யாவரும் இனிது ஓதி மகிழ்தற்குரிய வழி பாட்டுத் துதிநூல்களாக விளங்குகின்றன. திருச்சதகம் மணிவாசகரின் குருபக்தித் திறம் அல்லது ஞானபக்தி வைராக்கிய நலங்களை உணர்த்துகின்றது. **நீத்தல் விண்ணப்பம்** 'இறைவனே! என்னைக் கைவிட்டுவிடாதே' என அபயக்குரல் இடு கின்றது. திருவெம்பாவையின் சிறப்பை இங்குத் தனியே எடுத்து விவரிக்கவேண்டு

வதில்லை. இறைவனைப் பற்றிய பலதிற ஐயவினுக்களுக்கும், தெளிவுதரத் தக்க விடைகளைச் சிறந்த முறையில் வெளியிடுகின்றது திருச்சாழல். இறைவன் ஆகிய பேரரசனுக்கு உரிய நாடு மலை ஆறு ஊர் கொடி ஊர்தி மாலை படைக்கலன் ஆகியவற்றைத் திறன்தெரிந்து பாடுகின்றது திருத்தசாங்கம். திருப்பள்ளி எழுச்சிப் பாடல்கள், இறைவனைத் துயில் எழுப்பி இன்னருள் புரிய வேண்டுகின்றன.

> "திருவா சகம்இங்கு ஒருகால் ஓதிற்
> கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள்
> தொடுமணற் கேணியிற் சுரந்து நீர்பாய
> அன்பர் ஆகுநர் அன்றி
> மன்பதை உலகில் மற்றையர் இலரே"

எனச் சிவப்பிரகாசர், திருவாசகமாகிய தமிழ் வேதத்தின் சிறப்பை, மிகவும் விதந்தெடுத்துப் பாராட்டியிருத்தல் காணலாம்.

**'திருவாசகத்தேன்' :**

தமிழகத்தில் வாழையடி வாழையாகத் தோன்றியருளிய சான்றோர்கள் பலரும், திருவாசகத்தின்பால் எல்லையற்ற ஈடுபாடு கொண்டவர்களாகத் தொன்று தொட்டே இருந்து வந்துள்ளனர். திருவாசகத்தை ஓதிஓதி அவர்கள் உள்ளம் பெரிதும் உருகினர்; உயிர்க்கு உறுதி தேடினர்; இறையருளைப் பெற்று இனிது வாழ்ந்தனர். திருவாசகம் அவர்களின் சிந்தைக்குத் 'தேன்' எனப் பெரிதும் இனித்தது. ஆதலின், அவர்கள் திருவாசகத்தைத் 'தேன்' எனவே பாராட்டிப் போற்றினர். உடற்பிணி போக்கி நலம்பல நல்குவது தேன். அதுபோல் உயிர்ப்பிணி போக்கி, இறையருள் நலம் கிடைக்கத் துணை புரிவது 'திருவாசகம் என்னும் தேன்'! இதனை நம் முன்னைப் பெரியோர்கள் அனைவரும் தம் வாழ்வில் அனுபவித்து உணர்ந்து இன்புற்றனர்.

**திருவாசகத்தில் தேன் :**

இனி வேறொரு காரணமும் ஈண்டுக் கருதத் தகும். மணிவாசகர் இறைவனின் அருளைக் குறைவறப் பெற்றுத் திளைத்தவர். இறையருள் இன்ப அனுபவ நலத்தினை இனிது நிரம்பத் துய்த்தவர்களில் இணையற்றவர் மணிவாசகர். இறையருள் நுகர்ச்சியின் இன்ப நலன், அவர்தம் சிந்தையில் தேன் என இனித்தது. ஆதலின் திருவாசகத்தில் அவர் இறைவனின் அருட்டிறனைப் பலகாலும் தேன் எனவே சிறந்தெடுத்துக் குறிப்பிடுகின்றார்.

1. சிறந்தடியார் சிந்தனையுள் தேன் ஊறிநின்று" (சிவ. 47)
2. தேசனே தேன் ஆர் அமுதே (63)
3. கோற்றேன் கொண்டு செய்தனன் (திருவண் 157)
4. கருணை வான்தேன் (180)
5. தேனொடு பால்கட்டி மிகுவது (சத. 36)
6. இன்னது என்றறியாத தேனை ஆன் நெய்யை (38)
7. தேன் நிலாவிய திருவருள் (40)
8. தேனே அமுதே கரும்பின் தெளிவே (55)
9. தேனைப் பாலைக் கன்னலின் தெளிவை (58)
10. தேனே அமுதே கரும்பின் தெளிவே (90)
11. தேன்வந்து அமுதின் தெளிவின் ஒளிவந்த (அம். 4)
12. தேனையும் பாலையும் கன்னலையும் ஒத்து (11)
13. தேனாய் அமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய் (16)
14. தேனைப் பழச்சுவை ஆயினனை (பொன் 15)
15. தேனார் கமலமே சென்றூதாய் (கோ. 15)
16. அந்த இடைமருதில் ஆனந்தத் தேன் (பூ. 2)
17. பாலும் அமுதமும் தேனுடனும் பராபரன் (பூ. 11)
18. தேன்தங்கித் தித்தித்து அமுதூறும் (பொற் 2)
19. தேன்புரையும் சிந்தையராய் (தசா. 6)
20. கோற்றேன் மொழிக்கிள்ளாய் (4)
21. கண்ணகத்தே நின்று களிதருதேனே (பள்ளி 9)
22. சீருறு சிந்தை எழுந்ததோர்தேனே (கோயில் 8)
23. தழங்க ருந்தேன் அன்ன தண்ணீர் பருகத் தந்துய்யக் கொள்ளாய் (அடை. 10)
24. கோற்றேன் எனக்கு என்கோ (உயிர் 8)
25. தேன்பாய் மலர்க்கொன்றை (11)

26. தேனாய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான் (ஏசறவு 10)

27. சிவன்கருணைத் தேன்பருகி (குலா 5)

28. திருவார் பெருந்துறையான் தேன்உந்து செந்தீ (திருவெண்பா 1)

29. உள்ளமலம் மூன்றும் மாய உகுபெருந்தேன் (பண்டாய 2)

இங்ஙனம், இறைவனையும். அவனது அருளின் திறனையும், மணிவாசகர் ஆங்காங்கே தேன் எனவே பலகாலும் திருவாசகத்தின்கண் சிறப்பித்துக் குறிப்பிடுதலின், அதனை ஓதி உணர்ந்து உவந்த சான்றோர்கள் அனைவரும், திருவாசகத்தினையே தேன் என்று குறிப்பிட்டுப் பாராட்டிச் சிறப்பிப்பா ராயினர்.

தொல்லை இரும்பிறவிச் சூழும் தளைநீக்கி
அல்லல்அறுத்து ஆனந்தம் ஆக்கியதே ; —எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூர் எம்கோன்
திருவா சகம்என்னும் தேன்

## முடிவுரை :

இறைவனின் திருவடி தாமரைமலர்; அவற்றில் இடையறாது ஈடுபட்டு இறைஞ்சி வழுத்திய மணிவாசகர், அத்தாமரை மலர்களில் படிந்த வண்டு; அவர்தம் இன்னிசைத் துதியே வண்டின் மிழற்சி; இறைவனின் திருவடிகளில் ஈடுபட்டு அவர் நுகர்ந்த இன்பமே தேன். மணிவாசகராகிய வண்டு, இறைவனின் திருவடியாகிய தாமரை மலரில் படிந்து, நுகர்ந்த இன்பமாகிய தேனை, நாம் அனைவரும் இனிது உண்டு உவந்து உய்தி பெறும்படி, ஒருங்கே திரட்டிவைத்த பெருந்தேன்கூடு போல்வதே, திருவாசகச் செந்தமிழ்த் தெய்வமாமறை என, நாம் சுருங்கக் கூறிக் குறிப்பிடுதல் பொருந்தும்.

"தினைத்தனை உள்ளதோர்
பூவினில்தேன் உண்ணாதே
நினைத்தொறும் காண்தொறும்
பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும்பு உள்நெக
ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே
சென்றூதாய் கோத்தும்பீ"

என மணிவாசகர் இறைவனைப் பற்றிப் பாடுவது போலவே, திருவாசகமும் நாம் நினைத்தொறும் பேசுந்தொறும் ஓதுந்தொறும், அனைத்து எலும்பும் உள்நெக நம் உள்ளத்தில் ஆனந்தந்தேன் சொரியும் அளவிலாப் பெருஞ் சிறப்புடையதாகும். நம்மனோர் அனைவரும் திருவாசகத்தேனை நிரம்ப ஓதி உண்டு, சிவபிரான் திருவருளைப் பெற்று, வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து உய்திபெற முயலுவோமாக.

(இலங்கை யாழ்ப்பாணம் காரை நகர்ச் சைவமகா சபையின் ஐம்பதாம் ஆண்டுப் பொன்விழாப் பேரவையில், காரை நகர் இந்துக் கல்லூரி முதல்வர் திரு ஆ. தியாகராசர், எம். ஏ., அவர்கள் தலைமையில், நிகழ்த்திய சொற்பொழிவினைத் தழுவியது. 4—6—68).

—ஆசிரியர்.

## செய்திச் சுருக்கம்

திருவானைக்கா ஸ்ரீ சம்புகேசுவரர் கோயில் திருநீற்றான் மதில் மேல்புறத் திருப்பணித் தொடக்கவிழா, 12—7—68 அன்று நடைபெற்றது. சித்தாந்த கலாநிதி திரு. அவ்வை சு. துரைசாமிபிள்ளை அவர்கள் தலைமையில். தஞ்சைத் துணை ஆணையர் திரு டி. என். சிங்காரவேல் பி.ஏ., பி.எல்., அவர்கள் திருப்பணியைத் தொடக்கிவைத்தார்கள். அன்றுமாலை ஊஞ்சல் மண்டபத்தில் நடந்த கூட்டத்தில், திருப்பணிக் குழுத்தலைவர் திரு. டி. எம். நாராயணசாமிபிள்ளை எம். ஏ., பி. எல்., அவர்கள் வரவேற்புரை கூறினார்கள். திருச்சி. ரா. இராதாகிருஷ்ணன் எம்.ஏ., அவர்கள் சிறப்புரையும், திருக்குறள்வேள் திரு ஜி. வரதராஜப்பிள்ளை B.A. அவர்கள் நன்றியுரையும் நிகழ்த்தினார்கள்.

—ஆசிரியர்.

# இராமானுசரின் இனிய அருளுரைகள்

**முன்னுரை :**

சான்றோர்களின் சொற்கள் நமக்கு வாழ்க்கையில் பெரிதும் நலம் விளக்கும் சிறப்புடையன. வழுக்குகின்ற நிலத்தில் நடப்பதற்கு ஊன்றுகோல் பயன்படுவது போல, வாழ்க்கையில் துன்பங்களும் தொல்லைகளும் தோன்றும்போது சான்றோர்களின் சொற்கள் நமக்கு மிகவும் துணை புரிகின்றன. "இழுக்கல் உடையுழி யூற்றுக்கோல் அற்றே ஒழுக்கம் உடையார் வாய்ச்சொல்'' என்பது திருக்குறள்.

சான்றோர்களின் சொற்கள் அனைத்துமே, பொதுவகையில் நமக்கு நன்மை விளைவிக்கும் தன்மையுடையனவாகும். எனினும், அவற்றுள்ளும் சான்றோர்கள் தமது இறுதிக் காலத்திற் கூறியருளும் சொற்கள், சிறப்புவகையில் நமக்கு மிகவும் பயன் விளைவிக்கும் இயல்புடையனவாம். இறுதிக் காலத்திற் கூறப்படும் சொற்கள் அனுபவத்தின் முடிவாகவும் பிழிவாகவும் தோன்றுவன; தன்னலம் அற்ற நிலையிற் பிறர் நலமே விழைந்து வெளிவரும் புனிதம் மிக்கன; சொல்லவேண்டுவன பலவற்றையும் உள்ளடக்கிச் சுருக்கமாகப் புலப்படுத்துவன; இனியொருகாற் கூறவும் கேட்கவும் படாத நிலையுடைமையால், மிக்க அருமையும் பெருமையும் வாய்ந்தன.

உலகப் புகழ்பெற்ற புதினநூல் ஆசிரியர்களுள் ஒருவரும், இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்த பேரறிஞரும் ஆகிய சர் வால்ட்டர் ஸ்காட் (Sir walter scott) என்னும் பேரறிஞர் இறக்கும் தருவாயில், லாக்கர்ட் (Lockart) என்பவரை நோக்கி, இறுதியாகக் கூறிய அறிவுரை, "எனக்கு இனியோய்! ஒரு நல்ல மனிதனாக இரு'' (Be a good man, my dear) என்பதாகும். இவ்வறிவுரை எத்துணை அருமை மிக்க தொன்றாகத் திகழ்கின்றது! சுருக்கமாக இருப்பினும், இஃது எவ்வளவு பொருட் பெருக்கம் வாய்ந்து காணப்படுகின்றது!

அங்ஙனமே, மெய்ப்பொருள் நாயனார் தமது அரசியல் ஆயத்தார்க்கும் அழிவுறுங் காதலார்க்கும், தம்உயிர் பிரியும் பொழுதில் இறுதியாகக் கூறிய அறிவுரை 'பரவிய திருநீற்றன்பு பாதுகாத்து உய்ப்பீர்' என்பதாகும். தமது வாழ்நாள் முழுவதும் தாம் கடைப்பிடித்து ஒழுகி வந்த ஒரு குறிக்கோளினை இவ்வாற்றால் அவர் புலப்படுத்தியிருத்தல் காணலாம்.

இங்ஙனமே, தாம் சிலுவையில் அறையப்பட்டபோது இயேசுபெருமான் கூறிய இறுதியுரை, "பிதாவே, உம்முடைய கைகளில் என் ஆவியை ஒப்புவிக்கின்றேன்'' என்பது. இவ்வாறு சொல்லி அவர் தம் உயிரை நீத்தார். இந்தச் சொல்லானது எத்தனையோ பல நூற்றாண்டுகளாக உலகெங்கும் வாழ்கின்ற பக்தியுள்ளவர்களின் மரணவேளை ஆறுதற் சொல்லாகப் பயன் படும் வகையில் அமைந்துள்ளது.

இவ்வாறே புத்தர் பெருமானும், நபிகள் நாயகமும்கூடத் தமது இறுதிக் காலங்களில், இத்தகைய அருளுரைகளைத் தம்மைப் போற்றிப் பின்பற்றிச் சூழ்ந்து

நின்ற அன்பர்களுக்குத் திருவாய் மலர்ந் தருளி யுள்ளனர்.

அவைகளெல்லாம் எத்தகைய சிறப்பும் பெருமையும் உடையனவோ, அத்தகைய முறையில் ஸ்ரீவைஷ்ணவப் பெரும் சான் ஞோராகிய இராமானுசர், தாம் பரமபதத் துக்கு எழுந்தருளும்போது, அனைத்துயிர் களும் இறையருளைப் பெற்று உய்தி அடையும் பொருட்டு, தம்முடைய திருவடித் தொழும்பர்களாகிய முதலிக ளுக்கு அறிவுறுத்திப் போந்த அருள் மொழிகளும் இணையற்ற பெருஞ்சிறப்பு உடையனவாகும்.

"ஒரு வைஷ்ணவனுக்குத் துவயத்தை ஒழிய மந்திரம் இல்லை; மிதுனம் ஒழிய வஸ்து இல்லை; கைங்கரியம் ஒழியப் புருஷார்த்தம் இல்லை; ஆசாரிய அபிமானம் ஒழிய மோட்ச உபாயம் இல்லை. பாகவத அபசாரம் ஒழிய மோட்ச விரோதம் இல்லை" எனத் தம் திருவடியைச் சார்ந்த முதலி களுக்கு, இராமானுசர் தமது இறுதிக் காலத்தில் அருளிச் செய்தார் என்று 'குருபரம்பரைப் பிரபாவம்' என்னும் நூல் கூறுகின்றது.

'பிரபந்ந அம்ருதம்' என்னும் பிறிதொரு நூல், இராமானுசர் தமது திருவடி முதலி களுக்குப் பின்வரும் 82 இனிய அருண் மொழிகளை உபதேசித் தருளினர் எனச் சுவை மிகத் தொகுத்துக் கூறுகின்றது. இராமானுசர் தம் இறுதிக் காலத்தில் அருளிச் செய்த அவ்இனிய அறவுரைகள் மக்கள் உயிர்க்கு உறுதிபயக்கும் நல முடையனவாகச் சிறந்து திகழ்கின்றன. இம்மைக்கும் மறுமைக்கும் நலம் பயக்கத் தக்க வகையில் விளங்கி, மக்கள் வையத்து வாழ்வாங்கு வாழ்வதற்கு வழி காட்டும் அவ் அறவுரைகள் பின்வருவன வாகும் :–

(1) இறைவனின் தொண்டினையும், அடியவர்களின் தொண்டினையும், ஆசிரி யரின் தொண்டினையும், சமநிலையிற் கருதி மதித்தல் வேண்டும். (2) முன்னோர்கள் அருளிச் செய்த நூல்களில் நம்பிக்கை வைக்கவேண்டும். (3) ஒருபோதும் புலன் களுக்கு அடிமைப்பட்டு இருத்தல் ஆகாது. (4) சாதாரண நூல்களில் ஒருபோதும் பற்றுக் கொள்ளுதல் ஆகாது. (5) இறை வனைப் பற்றிக் கூறும் நூல்களில் நிலையான அன்பும், உறுதியும் கொள்ளு தல் வேண்டும். (6) தனது ஆசிரியர் களின் அருளால் ஞானோபதேசம் பெற்ற பின்னர், ஒரு பாகவதன் ஐம்புலன்களின் வழிச் செல்லுதல் கூடாது. (7) சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐந்தையும் அளவாக நுகர்தல் வேண்டும். (8) மலர் சந்தனம் வெற்றிலை முதலிய நுகர்ச்சிப் பொருள்களில் ஆசையற்றிருத் தல் வேண்டும். (9) இறைவனின் திருப் பெயர்களிற்போல, அடியார்களின் திருப் பெயர்களிலும் மதிப்பும் விருப்பமும் கொள்ளுதல் வேண்டும். (10) சிறந்த அடியார்களாகிய நல்லோர் இணக்கமே வீடுபேற்றுக்கு வாயில் என்று தெளிந்து, அவர்களின் திருவுள்ளம் மகிழும்படி நடந்துகொள்ளுதல் வேண்டும்.

(11) ஒருவன் எவ்வளவுதான் அறிவு உடையவனுயினும், இறைவனின் தொண் டினையும், ஆசிரியனின் தொண்டினையும் இகழ்ந்து, விருப்பு வெறுப்பு முதலியவை களால் ஐம்புலநுகர்ச்சிகளில் ஈடுபடு வானுயின், அவன் அழிவு எய்துதல் திண் ணம். (12) வெறும் புற ஒழுக்கங்களும் ஆசாரங்களும் மட்டுமே பகவானை அடை விக்கும் என்று நினைத்தல் ஆகாது. (13) ஸ்ரீவைஷ்ணவ ஒழுக்கங்களையே, வாழ்க் கையின் சிறந்த பயனுக மதித்தல் வேண் டும். (14) அடியார்களை ஒருபோதும் ஒருமையில் அழைத்தல் ஆகாது. (15) அடியார்களைக் காணும்போது, நாமே முத லில் கைகூப்பவேண்டும். (16) இறைவன்-ஆசிரியர்–அடியார் ஆகியவரின் முன்னிலை யில் கால்களை நீட்டலாகாது. (17) இறை வன்-ஆசிரியர்-அடியார் ஆகியோரின் திரு மாளிகைகள் உள்ள திசையில் கால்களை நீட்டிக்கொண்டு படுத்தல் கூடாது. (18) துயில் விழித்து எழும்பொழுது ஆசிரியர் களின் திருமரபை நினைத்துத் தியானம் செய்து கொண்டு எழுந்திருக்கவேண்டும். (19) இறைவன் சந்நிதியில் அடியார்கள் பலர் திரளாக இருக்கும்பொழுது, துவயம் என்னும் மந்திரத்தை நினைந்து கொண்டே,

வீழ்ந்து வணங்குதல் வேண்டும். (20) ஸ்ரீ வைஷ்ணவர்கள், இறைவன்-ஆசிரியர்-அடியார் ஆகியோரின் குணநலங்களைப் புகழ்ந்து ஈடுபட்டிருக்கும்போது, அவர்களைத் தானும் இயன்ற அளவு வழிபடுதலை விட்டு, இடை நடுவில் எழுந்து போவது மிகவும் பெரிய குற்றமாகும்.

(21) ஸ்ரீ வைஷ்ணவர்கள் எழுந்தருளினால், எதிரே சென்று வரவேற்று உபசரிக்கவும், அவர்கள் திரும்பிப் புறப்படுங்கால் பின்சென்று அவர்களின் திருவுருவம் கட்புலனுக்கு மறையும் வரையில் அஞ்சலியும் கையுமாய்க் கண்களிக்க நோக்கிக்கொண்டிருந்து பிறகு திரும்பவும், வேண்டும். (22) ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அடிமைப்பட்டு ஆன்மாவை நற்கதி அடையச் செய்து கொள்ளாமல், வயிறு வளர்த்தற்காகச் சாதாரண மக்களின் பின்னே அவர்களைப் புகழ்ந்து போற்றிக்கொண்டு, அலைந்து திரிதலாகாது. (23) எம்பெருமானின் விமான கோபுரங்களைக் கண்ட மாத்திரத்தில் எழுந்து அஞ்சலி செய்ய வேண்டும். (24) பிற சமயத் தெய்வங்களின் விமானம் முதலியவற்றைக் கண்டால், மிக வியப்பாக நினைத்தல் கூடாது. (25) பிறசமயத் தெய்வங் கள் பற்றிய செய்திகளைக் கேட்டு மிகமகிழ்தல் கூடாது. (26) ஸ்ரீ வைஷ்ணவர்கள் பகவத் பாகவத ஆசாரிய குணநலங்களில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும்போது அவற்றைக்கேட்டு மகிழ்ச்சியடையாமல், இடையில் குற்றங் குறைகளை எடுத்துக் கூறுதல் பெரும் பிழையாகும். (27) ஸ்ரீ வைஷ்ணவர்களின் திருமேனி நிழலை மிதித்தல் கூடாது. (28) ஸ்ரீ வைஷ்ணவர்கள் மீது, தம் நிழல் படும்படி நடத்தல் கூடாது. (29) அசுத்த மக்களைத் தொட்டு ஸ்ரீ வைஷ்ணவர்களைத் தொடல் ஆகாது. (30) ஏழையான ஸ்ரீவைஷ்ணவன் நம் முன்னே தண்டனிட, அதை நாம் அசட்டை செய்தல் அபசாரம் ஆகும்.

(31) ஸ்ரீவைஷ்ணவர்கள் அடியேன் என்று முன்சொல்லி வணங்க, அவர்களைப் போற்ருமல் அசட்டை செய்தல் பெருங் குற்றமாகும். (32) யாரேனும் ஒரு ஸ்ரீ வைஷ்ணவரின் குற்றங்குறைகளை நாம் அறிந்து கொள்ளநேர்ந்தாலும், அவற்றைப் பிறரிடம் சொல்லிக் கொண்டிராமல் அவருடைய நற்குணங்களை மட்டுமே நாம் நினைத்துப் பாராட்டி வருதல் வேண்டும். (33) பகவத் பாகவத ஆசாரியர்களின் திருவடித் தீர்த்தங்களைச் சாதாரணப் பொதுமக்கள் பார்க்கும்படி பெறுதல் கூடாது. (34) தத்துவத்திரயம் இரகசியத்திரயம் என்பவற்றின் ஞானம் இல்லாதவர்களின் திருவடித்தீர்த்தத்தை ஒரு போதும் ஏற்றல்கூடாது. (35) ஞான அநுட்டானங்கள் நன்ருகவே உடைய ஸ்ரீ வைஷ்ணவர்களின் திருவடித் தீர்த்தத்தை நாள்தோறும் ஏற்றல் வேண்டும். (36) பாகவதர்களுக்குத் தான் அடிமையென்று இராமல், தனனை அவர்களுக்குச் சமமானவன் என்று எண்ணக் கூடாது. (37) விழிப்பின்மையால் சாதாரணக் கீழ் மக்களைத் தீண்ட நேர்ந்தால், அவ்வுடையோடு நீராடியே, பாகவதர்களின் திருவடித் தீர்த்தத்தை உட்கொள்ள வேண்டும். (38) ஞானபக்தி வைராக்கியங்கள் நிறைந்த பெருமக்களைப் பெரிதும் சிறப்பாகப்போற்றி மதிக்க வேண்டும். (39) ஞானபக்தி வைராக்கியங்களில் சிறந்த திருமாலடியார்கள் திறத்தில், குலம் குணம் முதலியன பற்றிக் கருதாமல், அவர்களைப் பெருமதிப்பிற்கு உரியவர்களாக மதிக்கவேண்டும். (40) சாதாரண உலக மக்களின் இல்லங்களில், பெருமாள் தீர்த்தமாகிலும் ஏற்கலாகாது. (41) அத்தகையோர் இல்லங்களில் உள்ள பெருமாள் திருவுருவங்களையும் சேவிக்கத்தகாது.

(42) பெருமாள் உகந்தருளிய திவ்விய தேசங்களில், பொதுமக்களின் பார்வை படுதலாகிய குற்றம் இல்லை. (43) இறைவன் சந்நிதியில் ஸ்ரீ வைஷ்ணவர்கள் கொடுத்த பிரசாதத்தைத் தனக்கு அன்றைய தினம் விரதநாள் என்று கூறி மறுத்தலாகாது. (44) பகவத் பிரசாதத்தினை இன்னருக்குக் கொடுத்து எஞ்சியது என்று மறுத்தலாகாது. (45) ஸ்ரீ வைஷ்ணவர்கள் முன்னிலையில் தன்னுடைய பெருமைகளைச் சொல்லிக்கொள்ளக் கூடாது. (46) பாகவதர்களின் எதிரில் மற்ருெரு பாகவதரை அசட்டை பண்ணுதல் கூடாது. (47) பாகவத குணுனுபவத்தை நாள்தோறும் ஒரு கணமேனும்

செய்யாமல், தன்வேலையை மாத்திரம் பார்த்துக் கொண்டிருத்தல் ஆகாது. (48) ஆசாரியரின் குணநலங்களை நாடோறும் ஒரு நாழிகையாவது புகழ்ந்து போற்றல் வேண்டும். (49) நாள்தோறும் ஒருநாழிகை யேனும் அன்புடனும் நம்பிக்கையுட னும் திருவாய்மொழி முதலான பிரபந்தங் களை ஓதிவருதல் வேண்டும். (50) வயிறு வளர்ப்பதிலேயே காலம் கழிக்கும் உலக மக்களோடு கூட்டுறவு கொள்ளுதல் கூடாது.

(51) ஸ்ரீ வைஷ்ணவ சின்னங்களைத் தரித்துக்கொண்டு புலன்வழியே செல்லும் வஞ்சகர்களுடன் பழகுதல் ஆகாது. (52) எப்போதும் பிறர்மீது குற்றம் சொல்லிக் கொண்டே இருப்பவர்களோடு பேசுதலா காது. (53) அத்தகையவர்பால் பேச நேர்ந்த குற்றத்தைப் போக்கிக்கொள்ள, ஸ்ரீவைஷ்ணவர்களோடு இடையருது பழகி உரையாடுதல் வேண்டும். (54) ஆசாரி யர்களையும் பாகவதர்களையும் நிந்திப்பவர் களைக் கண்ணெடுத்துப் பார்த்தலும் ஆகாது. (55) துவயத்தை அனுசந்திக் கும் பாகவதர்களோடு எப்பொழுதும் பழகி நட்புக் கொள்ளல் வேண்டும். (56) பிர பத்தி நெறியில் மூழ்கியிருக்கும் பாகவதர் களோடு இடையருது தொடர்புகொண்டு பழகவேண்டும். (57) தத்துவத் திரயம் இரகசியத்திரயங்களில், முழுப் புலமை வாய்ந்த பெருமக்களுடன் பழகவேண்டும். (58) உலகியலிலேயே உழலுபவர்களின் தொடர்பைவிட்டு, பகவத் பக்தியிலேயே இருப்பவர்களோடு இடையருது பேசியும் பழகியும் வரவேண்டும். (59) வைஷ்ண வர்கள் தன்னை அவமானப் படுத்தினாலும் அவர்களிடத்தில் பகைமை பாராட்டுதல் ஆகாது.

(60) பரமபதத்திற்குப் போக வேண்டும் என்ற எண்ணம் கொண்டால், ஸ்ரீவைஷ் ணவர்களுக்கெல்லாம் நன்மை செய்ய வேண்டும். (61) இறைவனுடைய கட் டளைக்கு மாறுன செயல்களைச் செய்வதால் மிகப்பெரிய நன்மைகளை அடைவதாக இருந்தாலும், ஒரு சேதனன் அவற் றைச் செய்தலாகாது. (62) பெருமா ளுக்கு நிவேதனம் ஆகாத பொருள்களை உண்ணுதல் கூடாது. (63) இறைவ னிடம் பக்தியின்றிப் பொருள் ஈட்டுதல், இன்பம் நுகர்தல் ஆகியவற்றிலேயே உழலுபவர்களிடத்தில், எந்தப் பொருளை யும் ஏற்கலாகாது. (64) புலால் முதலிய தாமச குணப்பொருள்களையும், சண்டா ளர் மிலேச்சர் முதலியவர்களால் விரும்பப் படும் பொருள்களையும், அசுத்தமான பொருள்களையும்,சிராத்தம் முதலியவற்றில் அளிக்கப்படும் பொருள்களையும், இறை வன்பால் அடைக்கலம் புகுந்த பிரபந்நர் புசித்தல் ஆகாது. (65) தனக்கு விருப்ப மான பொருள்களை யெல்லாம் இறைவ னுக்கு நிவேதநம் செய்தல் கூடாது. (66) நூல்கள் உண்ணத் தகுந்தவை என்று கூறும் பொருள்களை யெல்லாம் இறைவ னுக்கு நிவேதநம் செய்தல் வேண்டும். (67) பகவானுக்குப் படைத்த உணவு நீர் சந்தனம் மலர் தாம்பூலம் ஆகியவற்றைப் பிரசாதம் என்று கருத வேண்டுமே தவிர, நாம் அனுபவிக்கத் தக்கவை என்று கருதுதலாகாது. (68) நூல்கள் விதிக்கும் கடமைகளை யெல்லாம் இறைவனின் முக மலர்ச்சிக்காகச் செய்வதாக எண்ண வேண்டும். (69) பாகவதர்களிடத்தில் அபசாரப்படுவதைக் காட்டிலும், ஆத்மா வுக்குக் கேடு வேறு எதுவும் இல்லை; மோட் சத்தை அடைவதற்குப் பாகவதர்களை உவகையுறச் செய்வதிலும் மேலான உபாயம் வேறு எதுவும் இல்லை.

(70) பாகவதர்களை வணங்கி வழிபடு வதைக் காட்டிலும், நாம் செய்யத் தக்கது வேறொன்றும் இல்லை; பாகவதர்களிடத்தில் துவேஷபுத்தி கொள்ளுவதைத் தவிர, ஆத்மா கெடுதற்கு வேறு காரணம் இல்லை. (71) இறைவனின் விக்கிரகமாக வழிபடப் பெறும் திருவுருவங்களைக் கல் மரம் என் றும், ஆசாரியனைச் சாதாரண மனிதன் என்றும், ஸ்ரீ வைஷ்ணவர்களை இன்ன சாதியார் என்றும், பகவத் பாகவதத் திரு வடித் தீர்த்தத்தை வெறும்நீர் என்றும், இறைவனின் திருமந்திரத்தை எளிய சொற்கள் என்றும், திருமகள் கேள்வனை ஏனைய தெய்வங்களோடு ஒப்பு என்றும் நினைத்தல், நரகத்தை அடைய ஏதுவா கும். (72) இறைவனை மகிழ்விப்பதைவிட, அடியார்களை மகிழ்விப்பது சிறந்தது;

இறைவன்பால் செய்யும் குற்றங்களைவிட, அடியார்கள்பாற் செய்யும் குற்றம் மிகவும் கொடியது. (73) பிரபந்நர்க்கு ஆன்ம ஈடேற்றம் இறைவனால் நிகழ்வது ஆதலால் அது நேராததற்குத் தான் வருந்துதலாகாது; வருந்துவானாயின், இறைவன்பால் தன் ஆன்மாவை ஒப்படைத்தது பொய்யாகும். (74) பிரபந்நனுடைய உடல் வாழ்க்கை, முன்செய்வினையின் பயனாக நிகழ்வது ஆதலால், அதுகுறித்துக் கவலையுறுதல் ஆகாது. கவலையுற்றால், கடவுளிடத்து விசுவாசம் இல்லாதவனாவான். (75) நீங்கள் செய்யும் கடமைகளை ஏதேனும் நன்மை கருதிச் செய்தலாகாது. இறைவனின் திருவுள்ளம் உவப்பதற்காகவே செய்யவேண்டும்.

(76) ஸ்ரீ பாஷ்யத்தைத் தக்க ஆசியரின் பால் கேட்டுத் தெளிந்து, உலகத்தில் பரவச் செய்ய வேண்டும். (77) அது முடியாவிட்டால், ஆழ்வார்களின் அருளிச் செயல்களை , நன்கினிது கற்றுத்தேர்ந்து மாணவர்களுக்கு உபதேசிக்க வேண்டும். (78) அது முடியாவிட்டால், எம்பெருமான் உகந்தருளின திவ்விய தேசங்களில் திரு விமானம் திருமதில் திருமண்டபங்கள், திரு ஆராதனப் பாத்திரங்கள், திருவாபரணங்கள், திருப்பரிவட்டங்கள், திருத்தேர் முதலிய வாகனங்கள், திருவிழா, அமுதுபடி, சாத்துபடி, திருநந்தவனம், திருமாலை, திருவிளக்கு முதலிய தொண்டுகளில் இயன்றதைச் செய்ய வேண்டும். (79) இதுவும் செய்ய இயலாவிட்டால், நமக்கு மிகவும் விருப்பமான திருநாராயணபுரத்தில் ஒரு கூரை வீடாகிலும் கட்டிக் கொண்டு, வாசம் பண்ணுங்கள். (80) இதுவும் இயலாவிட்டால், பொருள் உணர்ந்து துவயத்தை இடையறுது அநுசந்தித்துக்கொண்டு இருப்பிடத்திலேயே இருங்கள். (81) இதற்கும் இயலாவிட்டால், ஞானபக்திவைராக்யம் முதலான நற்குணங்கள் நிறைந்தவராய், நம்மைச் சேர்ந்தவர்கள் என்கிற நினைவுள்ள மகாத்மாக்களான ஸ்ரீ வைஷ்ணவர்களுடன் சேர்ந்து, அகங்காரத்தை விட்டு, அவர்களின் கட்டளைப்படி பணிந்து நடந்து கொண்டிருங்கள். இதுவேதான் கடைசி உபாயம். இதைவிட வேறு உபாயமில்லை.

(82) இவ்வாறு உய்தி பெறுதற்குரிய அன்பர்கள், ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஆகிய அநுகூலர், பகவத் விரோதிகளாகிய பிரதிகூலர், உலகியல் வாழ்க்கையிலேயே ஊன்றியுள்ளவர்களாகிய அநுபயர் என்னும் மூவர் திறத்திலும், முன் எச்சரிக்கையாக ஆராய்ந்து நடந்துகொள்ளவேண்டிய முறைகள் மூன்று உண்டு. அநுகூலரான ஸ்ரீ வைஷ்ணவர்களைச் சேவிக்கும் போது சந்தனம் புஷ்பம் தாம்பூலம் முதலானவைகளைப் பார்த்தாற் போலவும், விருப்பமான நற்பொருள்களைக் கண்டாற் போலவும், நடந்துகொள்ள வேண்டும்; பிரதிகூலரான பகவத்விரோதிகளைக் கண்டால், நெருப்பு பாம்பு முதலியவைகளைக் கண்டாற்போல அஞ்சவேண்டும்; அநுபயரான உலகமக்களைக் கண்டபோது, விறகையும், மண்ணையும் கண்டாற்போல அசட்டை செய்ய வேண்டும்.

ஒருகாற் பிரதிகூலர்கள் அநுகூலர்களானால், இரக்கமுற்று அவர்களை இனிது போற்ற வேண்டும். இவ்வாறன்றிப் பொருள் முதலியவற்றின் மீதுள்ள ஆசையினால் பிரதிகூலர் ஆன பகவத் விரோதிகளைப் போற்றினால், ஒரு பேரரசனின் மனைவி நீசனிடத்தில் பிச்சை ஏற்றால், அப்பேரரசனுக்குப் பழியும் சீற்றமும் உண்டாகுமாறு போலே, இறைவனின் திருவுள்ளம் நொந்துவிடும். பொருள்மீதும் இன்ப நுகர்ச்சிகளின்மீதும் கொண்ட ஆசையால், அநுகூலரான ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டு வணங்காமலும் ஆதரிக்காமலும் இருந்தால், பேரரசனின்முன்பு அவனது அருமைப் புதல்வனை அவமதிப்புச் செய்தவன் தண்டிக்கப் படுவதைப்போல, இறைவனின் திருவுள்ளம் கலங்கிவிடும். உலக மக்களாகிய அநுபயரை விரும்பி ஆதரித்தால், அது பெருஞ்சுடர் மணிக்கும் வெறும் கல்லுக்கும் இடையே உள்ள வேறுபாட்டினை அறியாமை போன்ற குற்றமாகும். இதனால் நன்மை எதுவும் எய்துதல் இயலாது.

முடிவுரை :

இராமானுசர் அருளிச் செய்த இனிய அருள் மொழிகளாகப் 'பிரபந்நாமிருதம்' என்னும் நூல் கூறுகின்ற இவ் வெண்பத்திரண்டு திருவார்த்தைகளின் அருமை பெருமைகளை, அன்பர்கள் அனைவரும் அறிந்து பெரிதும் போற்றிக் கடைப்பிடித்து ஒழுகி, நலம்பலவும் எய்த முயலுவார்களாக !

— ஆசிரியர்.

# வியத்தகு வேண்டுகோள்

**முன்னுரை :**

இறைவன், வேண்டுவார் வேண்டுவன எல்லாம் ஈந்தருள்பவன்; இனிய தனது அடியவர்களுக்கு எதனையும் மருதும், இல்லையென்னுதும், வரையறை இன்றி வாரி வழங்கும் அருள் வள்ளலாக அவன் விளங்குகின்ருன். 'ஆசை தீரக் கொடுப் பார், அலங்கல் விடைமேல் வருவார்' எனத் திருஞான சம்பந்தர், இறைவனின் எல்லை யில்லாத வள்ளன்மையைப் புகழ்ந்து பாடி யிருக்கின்ருர்.

**வேண்டுதல் :**

அன்பர்களும் அடியவர்களும் ஆகிய அனைவரும், இறைவனிடம் சென்று தத்தம் குறைகளை முறையிட்டுத் தாம்தாம் விரும் புவன பலவற்றையும் ஈந்தருளுமாறு, வேண்டிக் கொள்வர். எல்லாச் சமயங் களிலும் வேண்டுதல் — பிரார்த்தனை — நேர்த்திக் கடன் என்பது உண்டு. மக்கள் அனைவரும் ஏதேனும் ஒரு நன்மையை அடைய விரும்பியே, பெரும்பாலும் இறை வனை வணங்கும் வழக்கமுடையவராகக் காணப்படுகின்றனர். 'மதிவேண்டும்-நின் கருணை நிதிவேண்டும்-நோயற்ற வாழ்வில் நான் வாழ வேண்டும்' என்றெல்லாம், சிறந்த யோகிகளும் ஞானிகளும்கூட, இறைவனை வேண்டுதல் செய்துகொண்டு வழிபட்டு வந்துள்ளனர்.

**பரிபாடல் :**

திருப்பரங்குன்றத்திலுள்ள முருகனைப் பெருந்திரளான மக்கள் வந்து வழிபடும் காட்சியை, இற்றைக்குச் சுமார் இரண்டா யிரம் ஆண்டுகட்கு முற்பட்ட பரிபாடல் என்னும் சங்க நூல் விவரிக்கின்றது. அவர்களுட் சிலர், முருகனைத் தங்கள் கனவுகள் நனவாதல் வேண்டும் எனப் பணிகின்றனர்; ஒரு சிலர், தமக்கு மக்கட் பேறு கிடைத்தல் வேண்டும் எனத் தொழு கின்றனர்; மற்றும் சிலர் தங்களுக்கு நிரம் பப் பொருட் செல்வம் சேர்தல் வேண்டும் என்று விரும்பி வணங்குகின்றனர்! வேறு சிலர், தாம் மேற்கொண்டு செல்லும் போர் முயற்சிகளில் பகைவரைக்கொன்று வெற்றி அடைதல் குறித்து, இறைஞ்சி வேண்டிக் கொள்கின்றனர் என, ஆசிரியர் **நல்லந்துவனர்** என்னும் புலவர் பாடு கின்ருர்.

> ''கனவில் தொட்டது கைபிழை ஆகாது
> நனவிற் சேஎப்ப,நின் நளிபுனல் வையை
> வருபுனல் அணிகஎன வரம்கொள் வோரும்,
> கருவயிறு உறுகெனக் கடம்படு வோரும்,
> செய்பொருள் வாய்க்கஎனச் செவிசார்த்து
> வோரும்,
> ஐஅமர் அடுகஎன அருச்சிப் போரும்''
>
> —பரிபாடல், 8.

இதனல், இறைவன்பால் தாம்தாம் விரும்பும் அனைத்துப் பொருள்களையும் வேண்டிக் கொள்ளுதல்,மன்பதைக்கு இயல்பென்பது பெறப்படும்.

இம்முறையினை ஒட்டி, இறைவன்பால் குமரகுருபரர் ஒரு வியத்தகு வேண்டு கோளைச் செய்து கொள்கின்ருர். பிறரெல் லாம் இறைவன்பால் 'எமக்கு இது வேண்

டும் — அது வேண்டும்' என்று தம் இன்ப வாழ்க்கைக்குத் துணைபுரிவன பலவற்றை யும், ஒருங்கு தொகுத்து நிரந்து இனிது கூறி வரம்தர வேண்டுவர். ஆனல் நம் குமரகுருபரரோ, வேறு எவரும் செய்ய முற் படாத புதிய முறையில், இறைவன்பால் ஒரு தனிச் சிறப்பான வேண்டுதல் செய்து கொள்கின்றார்.

**குமரகுருபரர் :**

குமரகுருபரர், நெல்லை மாவட்டத்தில் **ஸ்ரீவைகுண்டம்** என வழங்கும் திருப்பதி யின் வடபாலில் உள்ள **கைலாசபுரம்** என் னும் தலத்தில், **சண்முக சிகாமணிக் கவி ராயர்** என்னும் தந்தையார்க்கும், **சிவகாம சுந்தரியம்மையார்** என்னும் தாயார்க்கும் மைந்தராகத் தோன்றியவர். ஐந்தாண்டு வரையில் பேசும் திறனின்றி மூங்கைப் பிள்ளையாக இருந்து, **திருச்செந்தூர்** முருகப் பெருமான் திருவருளால், மூங் கைத் தன்மை நீங்கிக் கவிபாடும் திறம் பெற்றவர். கந்தர்கலி வெண்பா, மீனட்சி யம்மை பிள்ளைத் தமிழ், மதுரைக் கலம் பகம், திருவாரூர் நான்மணிமாலை, முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ், சிதம்பரச் செய்யுட் கோவை, சிதம்பர மும்மணிக் கோவை, பண்டார மும்மணிக் கோவை, காசிக்கலம்பகம், மீனட்சியம்மை குறம், நீதிநெறி விளக்கம், சகல கலாவல்லிமாலை என்னும் நூல்களைப் பாடியவர். புகழ்மிக்க திருப்பனந்தாட் காசி மடத்தைத் தோற்று வித்தவர். தருமபுர ஆதீனத்தின் நான்காம் பெருங்குரவராக விளங்கியிருந்த **மாசிலா மணி** தேசிகர்பால் துறவு நிலை பெற்றவர். காசியிற் கேதார கட்டத்தில் குமாரசாமி மடம் நிறுவியருளியவர்.

**சிதம்பர மும்மணிக்கோவை :**

இனைய பல நலங்கள் வாய்ந்த குமரகுரு பரர், தாம் பாடிய சிதம்பர மும்மணிக் கோவை என்னும் நூலில் பின்வருமாறு இறைவனை வேண்டிக் கொள்கின்றார் :—

"பூக்காமலே காய்த்துப் பழுக்கின்ற வேர்ப்பலா மரங்கள், நிலத்தைப் பிளந்து கொண்டு பாதலம் வரையிற் சென்று, வேர் கள் தோறும் எண்ணிறந்த பழங்கள் பல பழுத்து விளங்குவது, முன்னர்ப் பதஞ்சலி முனிவரை இந்நிலவுலகத்துக்குத் தந்த நாகர் உலகத்திற்குத் தனது நன்றியின் அறிகுறியாக, அவற்றைக் கொடுப்பது போலத் திகழ்கின்றது.

அத்தகைய பலாமரங்கள் பல நிறைந்த, சோலைகள் பலவற்றால் சூழப்பெற்ற தில்லை மாநகரில் எழுந்தருளி வாழும் கூத்தப் பெருமானே! இங்கு அடியேனுக்கு ஒரே ஒரு சிறிய வரத்தை அளித்தருளல் வேண்டும்.

தேவர்களுக்கெல்லாம் தலைவனாகிய இந் திரனின் பெறுதற்கரிய வாழ்க்கையும், சங்கநிதி பதுமநிதி என்னும் இருபெரும் நிதிகளை உடைய குபேரனின் ஒப்பற்ற பெருஞ் செல்வமும், ஐந்து மலரம்புகளை உடைய மன்மதனின் அழியாத பேரழகும் ஒருங்கே கிடைத்தாலும், அவற்றைச் சிறிதும் விரும்பாமல் அஞ்சிக் கலக்க முற்று விலக்கி, கையிற் பிச்சையையே ஏற்று உண்டு வாழ்கின்ற உத்தம யோகி களுக்கு, அவர்கள் எவ்வாறு இருந்தாலும் இடையூறு சிறிதும் நேராது.

ஆனல் யானே, வாதத் தொடர்புடைய புளிப்புச் சுவையையும், பித்தத் தொடர் புடைய கைப்புச் சுவையையும், கோழைத் தொடர்புடைய இனிப்புச் சுவையையும், மற்றுமுள்ள சுவைகளையும் விரும்பி, அவற் றிலேயே அழுந்திப் புதிது புதிதாக உண்டு, கழிபெரும் காமத்தில் மூழ்கி, முழுவதும் பாவமும் பழியுமே மேவிநிற்கும் இயல்புடை யவன். அதனைத் தவிர ஞானச் செம் பொருளை உணர்ந்து, சிற்றறிவு நீங்கி, ஐம்புலன்களை அடக்கி, அறத்தின் வழி நின்று தீநெறி விலக்கி, நன்னெறியிற் செல்லுதற்குரிய அறிவுத் திறன் சிறிதும் எனக்கு இல்லை.

**வேண்டுகோள் :**

ஆதலின், மிகுந்த பெருங் குளிரால் யான் வருந்தும்போது, அழுக்கடைந்து கிழிந்த கந்தைகள் பலவற்றை ஒருங்கு சேர்த்துத் தைத்த ஒரு துணியைத் தவிர, வேறு துணி ஒன்றும் எனக்குக் கிடைக்கா மல் இருப்பதாக; பாழடைந்த வீட்டின் வாயிற்புறத்துத் திண்ணையல்லாமல் படுப்ப

தற்கு எனக்கு வேறு இடம் எதுவும் இல்லாமற்போவதாக; எனது கடுமையான பசியைத் தணித்துக் கொள்வதற்கு, உப்பில்லாமற் காய்ச்சிய புல்லரிசிக்கூழ் தவிர, வாய்விட்டு அழுது புலம்பினலும், வேறு உணவு எதுவும் இரக்கப்பட்டடேனும் எனக்குக் கொடுப்பவர்கள் இல்லையாகுக; ஒழுக்கம் நிறைந்த விழுப்பெருங் கேள்வியை உடைய மெய்த்தவத்தவர்களின் திருக்கூட்டத்தில் யான் நாள்தோறும் கலந்திருப்பேன் ஆகுக; இவ்வாறு என் உடல் நீங்கும் வரையிலும் எனக்கு நீ உதவுதல் வேண்டும். அது மட்டுமன்று: நான் எவ்வளவுதான் நின்னை இரந்து வேண்டிக் கொண்டாலும், நின்னுடைய சிறந்த திருவடியைத் தவிர, வேறு எதனையும் எனக்கு நீ கொடுக்காதிருத்தல் வேண்டும்.”

மல்லலம் பொழில்சூழ் தில்லை வாண!
வரம்ஒன்று இங்குஎனக்கு அருளல் வேண்டும்!
அதுவே,
பெருங்குளிர்க்கு உடைந்த காலைக் கருந்துணி
பலதொகுத்து இசைத்த ஒருதுணி அல்லது
பிறிதொன்று கிடையாது ஆக; வறுமனைக்
கடைப்புறத் திண்ணை அல்லது கிடக்கைக்கு
இடம்பிறிது இல்லை ஆக; கடும்பசிக்கு
உப்புஇன்று அட்ட புற்கைஊண் அல்லது,
மற்றோர் உண்டி வாய்விட்டு அரற்றினும்
ஈகுநர் இல்லை ஆக; நாள்நாளும்
ஒழுக்கம் நிறைந்த விழுப்பெருங் கேள்வி
மெய்த்தவர் குழாத்தொடும் வைக; இத்திறம்
உடல்நீங்கு அளவும் உதவிக், கடவுள்நின்
பெரும்பதம் அன்றியான் பிறிதொன்று
இரந்தனன் வேண்டினும், ஈந்திடாததுவே.

—சிதம்பர மும்மணிக்கோவை (8)

மிகச் சிறந்த பேரறிஞரும் கவிஞரும் தவ ஞானச் செல்வருமாகிய குமரகுருபர அடிகளார், இங்ஙனம் உலக மக்களின் நிலைக்கு மாருன முறையில், வியத்தகு நிலையில் இறைவன்பால் விண்ணப்பஞ்செய்து வரம் வேண்டிக் கொண்டிருப்பதன் நுட்பம், சிந்தித்து உணர்தற்குரிய சிறப்புடையது.

**செல்வத்தின் தீங்குகள் :**

‘செல்வம் குவிந்து திரளும் இடத்தில் மக்கள் சீர்குலைந்து சிதைந்து அழிகின்றுர்கள்’ (1). செல்வமானது பல தீமைகளுக்குப் பிறப்பிடமாக உள்ளது. ‘செல்வம் என்னும் அல்லல்’ என்று **மணிவாசகர்** துணிவாகச் சொல்கின்றுர். “மனிதன் தேவனுக்கும் காசுக்கும் ஒருங்கே பணிபுரிதல் முடியாது” (2). “ஊசியின் காதில் ஒட்டகம் நுழைந்தாலும் இறைவனின் அரசினுள் ஒரு பணக்காரன் நுழைதல் அரிது” (3). என இயேசு பெருமான் இயம்புகின்றுர். **ஆல்பிரட் ரஸல் வாலஸ்** (Alfred Russel Wallace) என்னும் அறிஞர், செல்வத்தால் நேரும் தீமைகள் குறித்துப் பின்வருமாறு கூறுவதாகக் **காந்தியடிகள்,** தமது சொற்பொழிவு ஒன்றில் குறிப்பிட்டுள்ளார்:—

“பெரும்பாலும் தொழிற்கூடங்கள் எல்லாம், மக்கள் பலருடைய பிணங்களின் மேலேயே எழுப்பப்படுகின்றன. செல்வச் செழிப்பில் வேகமாக முன்னேறும் நாடுகள், ஒழுக்க நிலையில் மிகவும் இழிந்து பின்னடைகின்றன. செல்வப் பெருக்கத்தினல் வாழ்வை அழிக்கும் வாணிபங்கள், கலப்படங்கள், கையூட்டுகள், சூதாடல் முதலியன, யாண்டும் பரவி வளர்கின்றன. செல்வம் பெருகப் பெருக நீதி பிறழ்கிறது;

(1) “Where wealth accumulates, there men decay.”

—**Oliver Goldsmith**

(2) “That you cannot serve God and Mammon, is an economic truth of the highest value.”

—**Mahatma Gandhi**

(3) “It is easier for a Camel to go through the eye of a needle than for a rich man to enter into the kingdom of God.”

—**Jesus Christ**

கட்குடியாலும், தற்கொலையாலும், இறப்புக்கள் மிகுதிப்படுகின்றன. முதிரா முன்னரே குழந்தைகள் பிறக்கின்றன; கூனும், குருடும், ஊமும், செவிடும் ஆகிய பிறவிக் குறைகள் மிகுகின்றன. பரத்தைமை (Prostitution) பெரிதும் பரவுகின்றது. ஓய்வும் செல்வமும் ஆகியன பெருகுதலின் விளைவாக, மணமுறிவுகள் (Divorce) நேர்கின்றன. வெவ்வேறு வகையான தீய களியாட்டங்கள் (Orgies) நிகழத் தலைப்படுகின்றன. போர்கள் பல மூளுதற்கும், செல்வச் செழிப்பே காரணமாக அமைகின்றது.''

**வறுமையின் பெருமை :**

இங்ஙனம், செல்வமிகுதியால் நேரும் தீங்குகள் பலவற்றையும் ஓர்ந்து உணர்ந்தே, ஞானிகள் அனைவரும் செல்வத்தை வெறுத்து ஒதுக்கி, வறுமையைத் தேடித் தழுவி மகிழ்ந்து வாழ முற்பட்டிருக்கின்றனர். புத்தர்-இயேசு-முகம்மது-கபீர்-நானக் - சைதன்யர் - சங்கரர்-தயானந்தர்-இராமகிருஷ்ணர் போன்ற ஞானிகள் பலரும், வறுமையையே பெரிதும் விரும்பிப் போற்றி மகிழ்ந்து வாழ்ந்துள்ளனர்(4).

வறுமை வாழ்வுதான், நாம் இறைவனை மறவாமல் இருப்பதற்குத் துணைபுரிகின்றது. நமக்குச் சுற்றம் பலம் அன்று, சிற்றம்பலமே நமக்குத் துணை என்று உணரச் செய்கின்றது. உலகின் நிலையாமையையும், துன்பங்களையும் உணர்த்துகின்றது; நம் செயலின்மையைத் தெளிவித்து, இறைவனின் அருட்செயலை அறிவுறுத்தும் திறனில், வறுமைக்கு நிகராவது பிறிதெதுவும் இல்லை.

**முடிவுரை :**

இந்நுட்பம் அறிந்த மெய்யுணர்வினுலேயே போலும், நம் குமரகுருபர அடிகளார், ''யான் போர்த்திக் கொள்ள ஒரு கிழிந்த துணியை மட்டுமே கொடு; படுத்துக் கொள்ளப் பாழடைந்த வீட்டின் வாயிற் புறத்துத் திண்ணையையே காட்டு; குடிப்பதற்கு உப்பில்லாத புல்லரிசிக்கூழை மட்டுமே அளி; உன் திருவடியைத் தவிர எனக்கு வேறு எதுவும் கொடுக்காதே'' என வேண்டிக் கொள்கின்ருர்! உன்னித்து உணருங்கால், உண்மையில், இஃது ஒரு 'வியத்தகு வேண்டுகோள்' தான், என்பதில் ஐயம் உண்டோ?

—ஆசிரியர்.

திமிரம் அகற்றும் சிறப்புமிகு
தெய்வக் கவிஞர்! திருச்செந்தூர்
நமது முருகன் அருள்பெற்ற
ஞானச் செல்வர்! தவமுனிவர்!
அமிழ்தின் இனிய நூல்கள்பல
அளித்த கலைஞர்! காசிவரை
தமிழை வளர்த்த குமரகுரு
பரநற் சான்ருேர், தாள்போற்றி.

—ஆசிரியர்.

---

(4) "Rome suffered moral fall when it attained high material affluence. So did Egypt aud perhaps most countries of which we have any historical record. The descendants and kinsmen of the royal and divine Krishna too fell when the were rolling in riches."

Jesus, Mahomed, Buddha, Nanak, Kabir, Chaitanya, Shankara, Dayanand, Ramakrishna were men who exercised an immense influence over, and moulded the character of, thousands of men. The world is the richer for their having lived in it. And they were all men who deliberately embraced poverty as their lot."

—Mahatma Gandhi

# "மயில் ஏறும் இராவுத்தன்"

**முன்னுரை :**

'இராவுத்தன்' என்பது தமிழிற் கலந்து வழங்கி வரும் ஓர் அராபியச்சொல். இதற்குக் குதிரைவீரன் (Cavalier) என்பது பொருள். இது 'ரவா' 'துதா' என்னும் இரு சொற்களினின்று தோன்றியதாக அறிஞர்கள் கூறுவர். ரவா-அரசன்; துதா-செய்தியாளன். அரசனுக்கு அல்லது அரசனிடமிருந்து, செய்தி கொணரும் குதிரை வீரன் என்னும் பொருளில், பண்டைநாளில் இச்சொல் வழங்கிவந்தது. இச்சொல் நாளடைவில், அராபிய நாட்டினின்று தமிழகத்திற்குக் குதிரைகள் கொணர்ந்து விற்கப் போந்த, இசுலாமியர் குலப் பெருமக்களைக் குறிப்பதாயிற்று.

குதிரை வீரன் என்னும் பொருளையுடைய 'இராவுத்தன்' என்னும் இச்சொல்லின் அமைப்பும் தோற்றமும் பொருளும் பற்றிய ஆராய்ச்சி எவ்வாறாயினும், இஃது இந்நாளில் இசுலாமிய குலத்துப் பெருமக்களையே குறிப்பதாக வழங்கி வருவதனை அனைவரும் அறிவர். முசுலீம்களிற் பலர், தம்முடைய பெயரோடு இச்சொல்லைச் சேர்த்துத் தம்மை வழங்கிக் கொள்ளுகின்றனர். முசுலீம்களில் ஒருவகை இனத்தார்க்குரிய சிறப்புப்பெயராகவே, இந்நாளில் இச்சொல் கையாளப் பெற்று வருகின்றது.

**அருணகிரிநாதர் :**

ஆயினும் இவ்வினிய சொல்லை, முருகனுக்கு உரிய பெயர்களுள் ஒன்றாக, முருகன் அடியார்களுள் தலைசிறந்த ஒருவர் ஆகிய அருணகிரிநாதர், விதந்தெடுத்து வழங்கி மகிழ்கின்றார்.

"கண்டுண்ட சொல்லியர் மெல்லியர்
காமக் கலவிக்கள்ளை
மொண்டுண் டயர்கினும் வேல்மறவேன்;
முது கூளித் திரள்
டுண்டுண் டுடுடுடு டுடு
டுடுடுடு டுண்டுண்டு
டிண்டிண் டெனக்கொட்டி ஆட
வெஞ்சூர்க்கொன்ற ராவுத்தனே"

"படிக்கும் திருப்புகழ் போற்றுவன்;
கூற்றுவன் பாசத்தினூற்
பிடிக்கும் பொழுதுவந்து அஞ்சல்!
என்பாய்; பெரும்பாம்பில் நின்று
நடிக்கும் பிரான் மருகா! கொடுஞ்
சூரன் நடுங்கவெற்பை
இடிக்கும் கலாபத் தனிமயில்
ஏறும் இராவுத்தனே"

—கந்தர் அலங்காரம்.

எனவரும் பாடல்களில், அருணகிரிநாதர் முருகப்பெருமானை 'இராவுத்தன்' என்று சிறந்தெடுத்துப் புகழ்ந்து போற்றியிருத்தல் காணலாம்.

முசுலீம் மக்களைக் குறிக்கும் 'இராவுத்தன்' என்னும் சொல்லால், அருணகிரிநாதர் முருகப்பெருமானைக் குறிப்பிட்டுத் துதித்துப் பாடியிருப்பது, நாம் பெரிதும் சிந்திப்பதற்கு உரியது. இஃது அவர்தம் காலநிலையினையும், அவரது சமரச மனப்பான்மையினையும் இனிது விளக்குவதாகும்.

**சபாசு, சலாம் :**

திருப்புகழ் என்னும் தெய்வநலஞ்சான்ற சிறந்த இனிய பாடல்களைப் பாடியருளிய அருணகிரிநாதப் பெருமான் புரபுடதேவ மாராயர்என்னும் விசயநகரச் சிற்றரசரின் காலத்தில் வாழ்ந்தவராகத் தெரிகின்றது. ஆதலின், அவர்தம் காலம் கி. பி. 15ஆம்

நூற்றாண்டாகும். முசுலீம் மக்கள் தென்னகத்திற் பரவிப் பெருகி வாழ்ந்துவரத் தலைப்பட்டு, ஆங்காங்கே ஆட்சிசெய்தும் வந்த காலம் அது! எனவே, அக்காலத்தில் இசுலாமியச் சொற்கள் பல, தமிழ் நாட்டு மக்களின் பேச்சு வழக்கிற் பரவிக் கலப்பனவாயிற்று. ''கடிசொல் இல்லை காலத்துப் படினே'' என்னும் தொல்காப்பிய நூற்பாவினைத் தழுவி, ஒரோவழி சபாசு (Shah Abbas), சலாம் என்பன போன்ற சில சொற்கள், தமிழ்க்கவிதைகளிலும் இடம்பெறலாயின.

> ''கற்ப கந்திரு நாடுயர் வாழ்வுற
> சித்தர் விஞ்சையர் மாகர் சபாசுஎனக்
> கட்ட வெங்கொடு சூர்கிளை
> வேர்அற விடும்வேலா''

> ''சுராதி பதிமால் அயனொடு சலாம்இடு
> சுவாமி மலை வாழும் பெருமாளே''

என அருணகிரிநாதர் தாமே, தமது திருப்புகழ்ப் பாடல்களில் சுபாசு, சலாம் என்னும் அயல்மொழிச் சொற்களை வழங்கியிருத்தல் காணலாம்.

### அருணகிரிநாதரின் அருள் உள்ளம் :

அருணகிரிநாதர், பரந்து விரிந்த சிறந்த உள்ளம்உடையவர்; நல்ல சமரச மனப்பான்மை வாய்ந்தவர்; எங்கிருந்தாலும் நல்லோரையும் நல்லனவற்றையும் இகழாது தழுவி ஏற்று மகிழும் இயல்புடையவர்; மொழி சமயம் இனம் முதலியனபற்றிய குறுகிய நோக்கங்கள் இல்லாதவர்; மக்களிடையே அன்பையும் ஒற்றுமையையும் பண்பாட்டையும் வளர்க்கும் குறிக்கோள் கொண்டவர். அவர்தம் திருப்புகழ்ப் பாடல்களில், செந்தமிழ் நலம் சிதையாமல், ஏற்றபெற்றி வடமொழியும் கலந்து, சந்தநலம் செறிந்து சிறந்தினிது நிற்கும்; சைவ வைணவ சமரச நோக்கும் போக்கும், அருணகிரிநாதரால் பெரிதும் போற்றப் பெற்றன; ''காசுக்குக் கம்பன், கருணைக்கு அருணகிரி'' என்பது பழமொழி. இறையருளில் திளைத்து இன்புற்ற அருணகிரிநாதரின் அருள் உள்ளத்தில், இன வேறுபாடு முதலிய குறுகிய நோக்கங்கள் இடம்பெற்றில. அதனல், அவர் தமது வழிபடு கடவுளும் தமிழ்த்தெய்வமும் ஆகிய முருகனையே 'இராவுத்தன்' எனக் கூறி மகிழ்ந்து புகழ்ந்துபோற்றுகின்றார்!

### தமிழகத்தின் சமரச ஞானம் :

நம் தமிழகம், தொன்றுதொட்டே சமரச ஞான நன்னெறியைத் தழுவி ஒழுகிவரும் பெருஞ்சிறப்புடையது. திருவள்ளுவர் எல்லாச் சமயங்களும் ஏற்கும் வண்ணம், பொதுமறையாகத் தமது திருக்குறளை இயற்றியருளினார். இளங்கோ அடிகள், சிவபிரான்-திருமால் - கொற்றவை - முருகன் – அருகன் முதலிய பல சமயக் கடவுளரையும் வேறுபாடுஇன்றி, ஆங்காங்கு ஏற்ற பெற்றி போற்றிப் புகழ்ந்து பாடிச் சென்றார். தாயுமானவர் வேதாந்த சித்தாந்த சமரச ஞான நெறியைப் பரப்பி யருளினார். இராமலிங்க அடிகளார் சத்தியஞான சமரச சன்மார்க்க சங்கம் கண்டு, சமயம் கடந்த மோன சமரச நெறியினையே வலியுறுத்தி வளர்த்தார். அருளாளர்களின் நெறியனைத்தும் ஒன்றேயாகும் அன்றோ?

'இராவுத்தன்' என்னும் சொல்லை, வீரன் என்னும் பொருளில் முருகனைக் குறிக்க அருணகிரிநாதர் வழங்கியிருப்பதும், இத்தகைய சமரச ஞானநன்னெறியின் பயனாய், இந்துமுசுலீம் ஒற்றுமையை வளர்க்க விரும்பிய அவர்தம் திருவுள்ளச் சிறப்பினையே விளக்குவதாகும் எனலாம்.

### முருகனின் தலங்கள் :

மேலும், முருகனுக்கும், முசுலீம் மக்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதனைப் பழநி, கதிர்காமம் முதலிய இடங்களில் இன்றும் காணலாம். பழநியில் உள்ள முருகனை முசுலீம் பெருமக்கள் இன்றும் வழிபட்டு வருகின்றனர். இலங்கையில் இருக்கும் கதிர்காமம் என்னும் தலத்தில் உள்ள முருகனை, இந்துக்கள் மட்டுமே யன்றி இசுலாமியரும் பௌத்தரும் கிறித்தவர்களும்கூட, மிக்க பக்தியுடன் திரளாக வந்து வழிபட்டுச் செல்கின்றனர். திருப்பரங்குன்றம் மலைமேல் முசுலீம் கோயில் ஒன்று இன்றும் உள்ளது. திருத்தணிகையில் முருகன் கோயில் வாயிலின் தென்புறம் ''பிரசன்ன காதர் ஈசுவரர்'' சந்நிதி என ஒன்றுள்ளது.

காதர் என்ற நவாபு ஒருவர் தனக்கு நேர்ந்த ஒருபெரும் இடர்ப்பாடு தீரப்பெற்றதனால், இங்கு ஓர் இலிங்கத்தை நிறுவி வழிபட்டு வாத்திய மண்டபத்தையும் கட்டி வைத்ததாகப் பெரியோர்கள் கூறுகின்றனர்.

**சுவைமிகு செய்திகள் :**

மற்றும், இங்கு ஒருவகையில் இயைபுடைமை பற்றி, இந்து முசுலீம் ஒற்றுமை குறித்த சில சுவைமிகு செய்திகள், அறிந்து கொண்டு இன்புறத்தக்கன. **நாகூர்** முதலிய பல இடங்களில், இந்துக்கள் எத்தகைய வேறுபாடும் கருதாமல் முசுலீம் தர்க்காக்களில் அன்புடன் வழிபாடு செய்தலைக் காண்கின்றோம். **குணங்குடிமஸ்தான், கபீர்தாசர்** முதலிய இசுலாமியப் பெருமக்களை, இந்துக்கள் பெரிதும் மதித்துப்போற்றி வருகின்றனர். மைசூரை ஆண்ட **ஐதர்அலி, திப்புசுல்தான்** என்னும் மன்னர்கள் இருவரும் தாம் இசுலாமியராக இருந்தும்கூட, இந்து மதத்தில் மிக்க ஈடுபாடு கொண்டிருந்தனர் எனவும், இந்துக் கடவுளருக்கு நன்கொடைகள் பல அளித்தனர் எனவும் தெரிகின்றது. **நஞ்சன்கூடு** என்னும் இடத்தில் உள்ள நஞ்சுணடேசுவரர் கோயிலில் விளங்கும் சிவலிங்கத்தை ஐதர் அலியே வழங்கினர். ஆதலால், அதற்கு **ஐதர்லிங்கம்** என்ற ஒரு பெயரும் உண்டாம். மராத்தியப் படைகள் கொள்ளையிட முயன்றபோது, சிருங்கேரி மடத்திற்குத் திப்புசுல்தான் தக்க பாதுகாப்புகளும் நன்கொடைகளும் பெரிதும் வழங்கினராம்.

மாணிக்க வாசகர் பொருட்டுச் சிவபெருமான் குதிரை கொணர்ந்தபோது, அரேபிய முசுலீமின் வடிவத்திலேயே வந்ததாகக் கொண்டு, ஆவணிமூலநாள் விழாவில் குதிரை கொணர்ந்து நிறுத்துவதற்காக மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில், இன்றும் ஒரு முசுலீம் அன்பரே இருந்து பணியாற்றி வருகின்றார். **ஸ்ரீரங்கம், திருநாராயணபுரம்** என்னும் புகழ்மிக்க வைஷ்ணவத் தலங்களில், பெருமாளின் காதலியாகத் **துலுக்கநாச்சியார்** என ஒரு திருவுருவமும் இருப்பதும், அதற்கு ரொட்டியும் வெண்ணெயுமே நிவேதனம் செய்யப்படுவதும், நாம் அறிந்து மகிழ்தற்குரியன.

இனி, வேறொரு முதன்மையான செய்தியும், இங்கு நாம் குறிப்பிடுதற்கு உரியது. இந்து மதத்திற்குரிய பிரமாண நூல்களுள் உபநிடதங்கள் சிறப்பிடம்பெற்றுள்ளன என்பதை அனைவரும் அறிவர். 'பிரஸ்தானத்திரயம்' என்னும் நூல்களுள், உபநிடதங்களும் ஏற்றுத் தழுவிக்கொள்ளப் பட்டிருக்கின்றன. இந்து மதத்திற்குரிய உபநிடதங்களின் உயர்வும் சிறப்பும் அறிந்து போற்றி, அவற்றை உலகிற் பரப்பிய பெருமை, ஒரு முசுலீமுக்கே உரியதாகும். நம்முடைய நாட்டில் அரசுபுரிந்த மொகலாய அரசர்களுள் ஒருவரான **ஷாஜகான்** என்பவரின் மூத்த புதல்வனும், **அவுரங்கசீப்** மன்னனின் அண்ணனுமான **தாராஷுகோ** என்னும் புகழ் பெற்ற சிறந்த பேரறிஞர், கி. பி. 1657-ஆம் ஆண்டில் பல புலவர்களின் உதவியைக் கொண்டு, ஐம்பது முதன்மையான உபநிடதங்களைப் பாரசீகத்தில் மொழிபெயர்த்தார். இம்மொழி பெயர்ப்பினைக் கொண்டே ஐரோப்பிய அறிஞர்கள் கி. பி. 1801ஆம் ஆண்டில், இலத்தீன் மொழியில் முதன்முதலில் உபநிடதங்களை மொழி பெயர்த்தார்கள். அதற்குப் பிறகுதான், மேலை நாட்டில் இந்தியநாட்டு உபநிடதங்களின் பெருமை பரவலாயிற்று. இந்தியத் தத்துவஞான நூல்களாகிய உபநிடதங்களின் சிறப்பு, இங்ஙனம் ஒரு முசுலீம் மன்னவ குமாரனால் உலகத்திற் பரவி வளரத் தலைப்பட்டதென்பது, ஒருவகையில் வியப்பிற்குரிய செய்தியேயன்றோ!

**முடிவுரை :**

இத்தகைய சமய சமரசஞான நல்லுணர்வு, உலகமெங்கும் தழைத்து வளர்ந்தோங்கிப் பரவி, மக்கட் குலமனைத்தும் ஒரு குலமாய்த் தக்காங்கு உவந்து இனிது ஒன்றிவாழ, 'மயிலேறும் இராவுத்தன்' ஆகிய முருகனின் மலரடிகளை வாழ்த்தி வணங்குவோமாக!

—ஆசிரியர்.

# அப்பர் என்னும் சொற்பொருள்

**முன்னுரை :**

சைவ சமய ஆசிரியர்களாகிய நால்வர் பெருமக்களுள், திருநாவுக்கரசர் ஒருவர். அலகில் கலைத்துறை தழைப்பவும், அருந் தவத்தோர் நெறி வாழவும், உலகில் வரும் இருள்நீக்கி ஒளி விளங்கு கதிர்போல வந்து, திருநாவுக்கரசர் திருவவதாரம் செய் தார். திருநாவுக்கரசர் ஒரு சிறந்த சமயா சிரியர் மட்டுமே யல்லர்; மிகவும் புகழ் பெற்ற ஒரு பெரும் வரலாற்றுத்தலைவரும் ஆவார்!

**திருப்பெயர்கள் :**

இவருக்குத் தாய் தந்தையர் இட்ட இயற்பெயர், மருள்நீக்கியார் (அறியாமை யைப் போக்குபவர்); இவர்க்கு இறைவன் வழங்கிய பெயர் நாவுக்கரசர் என்பது.

> "பாவுற்றலர் செந்தமிழின் சொல்வளப்
> பதிகத்தொடை பாடிய பான்மையினல்
> நாவுக்கரசு என்று உலகு ஏழினும்நின்
> நாமம் நயப்புற மன்னுக"

என்று, திருவதிகை வீரட்டானேசுவரர் அருளிச் செய்ததாகப் பெரியபுராணம் பாடுகின்றது. 'நாவுக்கரசர்' என்னும் சொற்றொடர் 'நாச்சுவை யறிதலில் வல்ல வர்' (Glutton; Gormandizer) எனவும் பொருள்படக் கூடுமாதலின், அதனை விலக்கி 'இன்னது அல்லது இதுஎன மொழிதல்' என்னும் தந்திரவுத்திக்கு ஏற்ப, "நாவின் மொழிக்கு இறை ஆகிய அன் பர்" எனச் சேக்கிழார் பெருமான், அச் சொற்றொடர்க்கு உரியபொருளை, அடுத்த பாடலில் (75) விளக்கம் செய்தருள்வர், வாகீசர், சொல்லரசர், மொழிவேந்தர்' வாக்கின் மன்னவர் என்பன போன்று வரும் தொடர்கள் பலவும், இப்பொருளையே வற்புறுத்துவனவாகும். சைவசமய ஆசி ரியர்களுள் இவர் ஒருவர் மட்டுமே 'தாண் டகம்' என்னும் பாடல்வகையினை மிகுதி யாகப் பாடியவராதலின், திருநாவுக்கரசர் பெருமானுக்குத் தாண்டகவேந்தர் எனவும் ஒருசிறப்புப் பெயர் வழங்கும்.

**அப்பர் என்னும் அரிய பெயர் :**

இங்ஙனம் திருநாவுக்கரசர்க்கு வழங்கி வரும் பெயர்கள் பலவற்றுள், 'அப்பர்' என்னும் ஒரு திருப்பெயரும் மிக்க சிறப் புடையதாய், மக்களிடையே அன்பும் மதிப்பும் ஆர்வமும் அமையுப் பெரிதும் வழங்கிப் போற்றப் பெற்று வருகின்றது. 'அப்பர்' என்னும் திருப்பெயர், திருநாவுக் கரசருக்குத் திருஞான சம்பந்தரால் வழங் கப்பெற்றதனைப் பெரிய புராணம், பல இடங் களிற் குறிப்பிட்டுக் கூறுகின்றது.

திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசரை 'அப்பர்' என அழைத்தமை, தாம் மிகவும் இளம்பிள்ளைமைப் பருவத்தினராக இருந் தமையினல், தம்மிற் பெரிய அவரை அன் புடன் தந்தை என்னும் நிலையில் உறவு ரிமை பாராட்டி மகிழ்ந்த காரணம்பற்றி யிருக்கலாம் என்று, பொதுவாக நாம் கருதுதல்கூடும்.

ஆனல் 'அப்பர்' என்னும் சொல்லுக்கு, மற்றும் பல்வேறு பொருட் குறிப்புக்களும் இருப்பதாகக் கருத இடம் உள்ளது. "ஒவ்வொரு மொழியிலும் ஒரு சில சொற் கள் மிகவும் பொருள் நிறைந்து சிறந்து

விளங்குவது உண்டு. அச்சொற்களுள் ஒவ்வொன்றைப் பற்றியும் ஒவ்வொரு தனிப்புத்தகமே கூட எழுதலாம். அத்தகைய விரிவான பொருள் நிறைவை அச்சொற்கள் பெற்றிருக்கின்றன' (1) என அறிஞர்கள் குறிப்பிடுவர்.

**அப்பர் என்னும் சொற்பொருள்கள் :**

அம்முறையில் 'அப்பர்' என்னும் சொல்லின் பொருட்டிறங்கள்பற்றி அறிந்து கொள்ளுதற்குத் திருமுறைகளிலோ, அன்றி அவற்றின் சார்புடைய பிறநூல்களிலோ, தெளிவான குறிப்புக்கள் ஏதும் காணப்படவில்லை. ஆயினும், வைணவ சமயத்தில் 'மொழிக்கு மொழி தித்திப் பாகச்' சுவைபெருக வரையப்பெற்றுள்ள நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பேருரைகள், அப்பர் என்னும் சொற்பொருளின் விளக்கம் இனையது என நாம் உணர்ந்து கொள்ள, நமக்குப் பெரிதும் துணைபுரிகின்றன. அவ்விளக்கம் வருமாறு:—

(1) அப்பர் என்னும் சொல்லுக்குத் **'தந்தை'** என்பது மட்டுமே பொருளன்று. அதற்குப் **'பெரியவர்'** எனவும் ஒரு பொருளுண்டு. திருநாவுக்கரசர் 81 ஆண்டுகள் வாழ்ந்த முதியவர் (விருத்தர்) ஆதலின், அவரைப் பெரியவர் என்பது பொருத்தமேயாகும். அவர் வயதினால் மட்டுமே பெரியவரல்லர். 'வயோ விருத்தம்' 'குண விருத்தம்' 'ஞான விருத்தம்' என்னும் மூவகை விருத்தமும் உடைய பெரியவர் என்று அவரைக் கொள்ளுதல்தகும். வயதினாலும் குணத்தினாலும் ஞானத்தினாலும் இனையபிற சான்றாண்மை நலங்களினாலெல்லாமும், பெரியவராகத் திகழ்ந்திருந்தமைபற்றியே, திருஞானசம்பந்தர் அவரை 'அப்பர்' என்றார் ஆதல் வேண்டும்.

(2) இனி அப்பர் என்னும் சொல்லுக்கு வேறொரு சிறப்புப் பொருளும் உண்டு. அதனை **வழிபடத்தக்கவர் (பூஜ்யர்)** என்னும் பொருளில் திவ்வியப் பிரபந்த உரையாசிரியர்கள் வழங்கியுள்ளனர். திருநாவுக்கரசரின் அருமைபெருமைகளை உணர்ந்த திருஞான சம்பந்தப் பெருமான், நம்மனோரால் பெரிதும் வழிபடத்தக்க சிறந்த மாட்சிமை உடையவராதல் கருதியும், அவரை அப்பர் என அன்புடன் போற்றிப் பாராட்டிச் சிறப்பித்து வழங்கினராதல்கூடும்.

(3) இனி இவைகளேயன்றி, அப்பர் என்னும் சொல்லுக்கு **உபகாரகர்** என்ற ஒரு பொருளும் உண்டு எனத் தெரிகின்றது. பிறரெவரும் செய்தற்கரிய பேருதவிகளை, நம் தமிழகத்திற்குப் பல்லாற்றானும் செய்தருளியவர் திருநாவுக்கரசராதலால், இப்பொருள் கொள்ளுதலும் மிக்க பொருத்தமேயாகும்.

(4) இனி இவற்றினெல்லாம் வேறாக, அப்பர் என்னும் சொல்லுக்கு மற்றொரு சிறப்புப் பொருளும் இருப்பதாக அறிகின்றோம். எல்லாவற்றிற்கும் **மூலகாரணர்** ஆக விளங்குபவர் (சர்வகாரண பூதர்) எனவும், இச்சொல்லுக்கு உரையாசிரியர்கள் பொருள் வகுத்துள்ளனர். தமிழகத்தின் மொழி-சமயம்-நாகரிகம்-பண்பாடு முதலிய பலதுறைகளின் வளர்ச்சிக்கும் சிறப்பிற்கும், மூலகாரணராக விளங்கிப் பெருந்தொண்டாற்றியவர் திருநாவுக்கரசராதலின், இங்ஙனம் பொருள் கொள்ளுதலும் ஏற்புடைத்தே ஆகும்.

(5) திருநாவுக்கரசர் பல்லவர்காலத்தில் **கி. பி. 7-ஆம்** நூற்றாண்டில், வாழ்ந்திருந்தவர். திருஞானசம்பந்தரும் அக்காலத்தில் உடன் வதிந்தவரேயாவர். பல்லவர்களின் காலத்தில், தமிழகத்தில் பிராகிருதம் பாலி முதலிய மொழிகள் செல்வாக்குப்பெற்றுப் பரவியிருந்தன. பிராகிருதம்முதலிய மொழிகளில் **'பப்ப'** என்னும் சொல், சான்றோர்

---

(1) "Some words carry so much, that a whole book might be written on their meaning; and indeed many thinkers have toiled long on the definition of small words such as **good, beautiful, sublime, romantic.** It was well said by **Cardinal Newman** that the word God is itself a theology, and there are hundreds of other words which are in themselves embryonic systems of thought."

—**Bernard Groom.**

A short History of English words, P. 126.

களைக் குறிக்கும் மதிப்பியற் பெருஞ்சொல்லாக விளங்கியது. பப்ப என்னும் சொல், பல்லவர்காலத்துக் கல்வெட்டுக்களில் மிகப் பெரும் சான்றோர்களைக் குறிக்கும் ஒரு சிறந்த மதிப்பியற் சொல்லாக வழங்கி வந்தமை அறியப்படுகின்றது.

'மகாராஜா பப்ப சுவாமி' (1)
'பப்ப பட்டாரக மகாராஜா' (2)
'தைவதம் ஆகாநின்ற பப்ப பட்டாரகர்'(3)
'பப்ப பட்டாரக பாத பக்தன்' (4)

என்பன போன்ற சொற்றொடர்கள், பல்லவர் காலத்துக் கல்வெட்டுக்களிற் காணப்படுகின்றன, 'பப்ப' என்னும் பிராகிருதச் சொல்லும், 'அப்பர்' என்னும் தமிழ்ச் சொல்லும் ஒன்றோடொன்று பெரிதும் தொடர்புடையனவாய், ஒரே பொருள் குறிப்பனவாகத் தோன்றுகின்றன. 'பப்ப' என்பதற்கு 'அப்பன்' என்பதேபொருள். 'Papa' என்னும் ஆங்கிலச் சொல்லும் 'Father' என்னும் பொருளே உடையதாதல் காண்க. தந்தை என்னும் பொருளையுடைய 'Papa' என்னும் சொல்லினின்றே ஞானத்தந்தை என்னும் பொருளில் 'Pope' என்னும் சொல் தோன்றியது. Abba, Abbot, Abbey, Abbacy என்னும் சொற்களும்கூட, 'அப்பன்' என்னும் தமிழ்ச் சொல்லினது பொருளின் அடிப்படையையே போன்றனவாக அமைந்து இருத்தல், எண்ணியுணர்ந்து இன்புறுதற்கு உரியது.

திருமங்கையாழ்வார் அருளிய பெரிய திருமொழிப் பாசுரம் ஒன்றில், 'பப்ப அப்பர் மூத்தவாறு' என வந்திருத்தல், இக்கருத்தினை வலியுறுத்தும்; இஃது 'அடவி காடே' எனத் தேவாரத்திலும்; 'அதுதான் ஞான திரோதகமாய் மறைத்துக்கொடு நிற்றலான்' எனச் சிவஞான போதத்திலும், 'ஸ்லேட் பலகை' 'கேட் வாசல்' எனப் பேச்சு வழக்கிலும் (Tautology, Redundancy) வருவனவற்றைப் போல்வதாகும்.

(6) பண்டைக் காலத்தில் 'பப்ப' என்னும் சொல், அரசராகஇருந்து துறவு நெறிமேற் கொண்டவர்களையும், அரசர்களுக்கு ஞானகுருவாக (Spritual preceptors) விளங்கிய பெருமக்களையும் குறிக்கும் சிறப்புரிமை உடையதாக வழங்கி வந்தமை புலனாகின்றது.

திருநாவுக்கரசர், **மகேந்திரவர்மன் — நரசிம்மவர்மன்** முதலிய பல்லவப் பேரரசர்களின் ஞானப் பெருங்குரவராகத் திகழ்ந்திருந்தமை தெளிவு. அச்சிறப்புடைமை கருதியும், திருநாவுக்கரசரைச் சம்பந்தர் 'அப்பர்' எனப் போற்றியருளினர் போலும்!

(7) இஞ்ஞான்று நாம் அனைவரும் காந்தியடிகளை நாட்டின் தந்தை — தேசபிதா — பாபுஜி — (The Father of the Nation) என்றெல்லாம் பாராட்டி வருகின்றோம். இத்தகைய அரும்பெரும் பொருட் குறிப்பிலேயே, சம்பந்தர், நாவுக்கரசரைப் பல இடங்களில் 'அப்பர்' எனச் சிறப்பித்துக் குறிப்பிட்டருளினர் என்றும் கொள்ளலாம். தமிழ் நாட்டுக்குப் பல்லாற்றானும் தந்தை எனப் போற்றத்தக்கவர் அப்பர் எனலாம்.

**அப்பர் பாடலில் அப்பர் :**

இனி, இறுதியாக இங்கு நாம் வேறொன்றும் அறிந்து மகிழ்தற்கு உரியதாக உள்ளது. இன்ன பொருளைத்தான் குறித்து நிற்பது என வரையறை செய்து, தெளிவுறத் துணிந்து கூறுதற்கு இயலாத நிலையிலுள்ள, அப்பர் என்னும் இந்த அரிய சொல்லை, அப்பர் பெருமானே தமது பாடல் ஒன்றில், அழகுறக் குறிப்பிட்டுள்ளார்.

ஐம்புலன்கள் நமக்குச் செய்கின்ற துன்பங்களை நாவுக்கரசர் இழ்ச்சிக் குறிப்பில் நயமுற உணர்த்துகின்றார். ஐம்புலன்கள் நம்மைத் தத்தம் வழிகளில் ஈர்த்து அலைக்கழிக்கின்றன. நல்லனவற்றை விலக்கித் தீயனவற்றிலேயே நம்மை ஈடுபடுத்தி, ஐம்புலன்கள் நமக்குச் செய்யும் துன்பங்களுக்கு அளவில்லை. நமது மனம் நல்லனவற்றை ஒரோவழி நாடினாலும், அதனை விடுமாறு செய்து, தீயனவற்றையே நாம் கைக்கொள்ளும்படி ஐம்புலன்கள் நம்மைப் பல்லாற்றானும் நலிவுறுத்துகின்றன. அதனால் நாம் செய்வதறியாது திகைத்து அலமந்து, சிதைந்து சீரழிந்து நிற்கின்றோம். ஐம்புலன்களின் இவ்வியல்பு ஒரு

வகையில் செம்புலச் செல்வர்களாகிய ஞானசிரியர்களின் செயலே ஒத்துள்ளது.

ஞானசிரியர் :

ஒரு மனிதன் செய்யத்தக்கன இவை, செய்யத் தகாதன இவை என்று கூறி, விதிவிலக்குகளை உணர்த்தி அறிவுறுத்தி, நன்மை விளையச் செய்பவர்கள் ஞானசிரியர்கள் ஆவர். 'அதனைச் செய், இதனைச் செய்யாதே' என்று அறவுரைகூறி, நமக்கு அணியராயும் இனியராயும் இருந்து உதவி செய்வது, ஞானசிரியர்களின் இயல்பு. 'நல்லனவற்றைக் கைக்கொள்ளுக, தீயன வற்றைக் கைவிடுக' என்பர் ஞானசிரியர்! நல்லனவற்றை விலக்கி, அல்லனவற்றிற் செலுத்துவன ஐம்புலன்கள்! நம்மை உய்விக்கும் ஞானசிரியர்களுக்கும், நம்மைக் கெடுத்து நலிவிக்கும் ஐம்புலன் களுக்கும், 'அது தருக' 'இது விடுக' என்னும் திறனில், ஒரு வகையில் ஒப்புமைத் தன்மை யுண்டு போலும்! என எள்ளற் குறிப்பு (Irony) அமைய, இகழ்ந்து பாடு கின்றுர் நாவுக்கரசர்!

"முப்பதும் முப்பத் தாறும்
முப்பதும் இடு குரம்பை
அப்பர்போல் ஐவர் வந்து
அதுதருக இதுவிடு என்று
ஒப்பவே நலிய லுற்றுல்
உய்யுமாறு அறிய மாட்டேன்
செப்பமே திகழும் மேனித்
திருப்புக லூர னீரே"

எனவரும் திருநாவுக்கரசர் தேவாரத்திற் பயின்றுள்ள அப்பர் என்னும் சொல், அல்லனவற்றை விலக்கி நல்லனவற்றை நாம் கைக்கொள்ளும்படி செய்தருள்கின்ற ஞானப் பெருங்குரவர்களையே குறிப்பதாக அமைந்திருத்தல், அறிந்து மகிழ்தற்கு உரியது.

பாடற்பொருள் விளக்கம் :

ஒரு சிலர் இத்திருப்பாடலுக்குப் பொருள் கொள்ளுங்கால் 'குரம்பை+அப்பர்' என இயைப்பர். அங்ஙனம் கொள்ளாமல் 'குரம்பையில்' என ஏழாம் வேற்றுமையாகப் பொருள் கொள்ளுதல் நலம். "ஒரு முழம் உள்ள குட்டம், ஒன்பது துறை யுடைத்தாய், அரைமுழம் அதன் அகலம்; அதனில் வாழ் முதலை ஐந்து" எனப் பிறி தோர் இடத்தில் நாவுக்கரசரே பாடியிருத் தல் காணலாம். 'குரம்பையில் ஐவர் வந்து நலிவர்'; 'அப்பர்போல் ஐவர் வந்து அது தருக இதுவிடுக என்று ஒப்பவே நலிவர்' எனக் கொள்ளுதல் சிறக்கும். 'அப்பர் போல்' என்றதனுல், போலாமை புலப்படுத் தப்பெற்றது எனலாம். 'அதுதருக இது விடுக' என்று நம்மை வற்புறுத்துதலில், ஞானசிரியர்க்கும் ஐம்புலன்களுக்கும் ஒரு வகையில் சிறிதளவு ஒப்புமையுண்மை உணரற்பாலது.

முடிவுரை :

இதுகாறும் கூறியவாற்றுல், நாவுக்கர சர்க்கு 'அப்பர்' என வழங்கும் அரிய பெயரின் சொற்பொருள் நுட்பங்கள், ஓரளவேனும் உணரப்பெறும். அத்தகைய பெருஞ்சிறப்புக்குரிய அப்பர் பெருமான் அருளிய தேவாரத் திருமுறைகளை, நாம் அன்புடன் ஓதி நலம்பலவும் எய்தி வாழ முயலுவோமாக!

சூலைநோய் தலைக்கீ டாகத்
தொல்சிவ நெறிக்கு மீண்டு
மூலையும் முடுக்கர் தோறும்
முத்தமிழ் முழங்கும் வண்ணம்
சாலநற் புரட்சி செய்த
தமிழ்நாட்டுத் தந்தை யாகும்
சீலமார் அப்பர் பெம்மான்
சிறப்பெலாம் போற்றி உய்வாம்!

—ஆசிரியர்.

[திருப்பனந்தாள் பெரிநாய்கி உடனுறை செஞ்சடையப்பர் கோயிலில், நிகழ்ந்த திருக்குடமுழுக்குப் பெருவிழாவில் நடை பெற்ற திருமுறை மாநாட்டில், திருப்பனந் தாள் காசிமடம் இளவரசு – வித்துவான் ஸ்ரீமத் முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் தலைமையில், 3—7—68 புதன் அன்று மாலையில் நிகழ்த் திய சொற்பொழிவின் ஒரு பகுதி.]

—ஆசிரியர்,

# கொங்கு நாட்டுத் தலங்கள்

### 3. திருநணா (பவானி)

**இருப்பிடம்:** ஈரோடு இருப்புப்பாதை நிலயத்தில் இருந்து, மேற்கே சுமார் பத்து கல் தொலைவில் உள்ளது. இஃது இப்போது 'பவானி' என்ற பெயரால் வழங்கி வருகின்றது. பதுமமலை, சங்கமலை, திருச்செங்கோடு என்னும் நாகமலை, மங்கலமலை, வேதமலை (ஊராட்சிக் கோட்டை) என்ற ஐந்து மலைகளிடையே, இஃது அமைந்து இருக்கின்றன்றது.

**தலப் பெயர்கள்:** பவானியாறு காவிரி யாற்றுடன் கூடுகின்ற தலமாதலின், இதனைப் 'பவானி கூடல்' எனவும் வழங்குவர்; தன்னைத் தரிசித்தோர்க்கு யாதொரு தீங்கும் நண்ணாத தலம் ஆதலின், 'நண்ணாவூர்' அல்லது நணா என இதற்குப் பெயர் அமைந்ததாகத் தலபுராணம் கூறும். குபேரன் வழிபட்டதனால் தட்சிண அளகை என்றும்; இலந்தை மரம் தல விருட்சமாகச் சிறந்து விளங்குவதனால் தட்சிண வதரி காச்சிரமம் என்றும்; பராசர முனிவர் பூசித்ததனால் பராசர க்ஷேத்திரம் என்றும்; வட நாட்டிற் கங்கை யமுனை சரசுவதி என்னும் மூன்று பேராறுகள் கூடுவது போலக் காவிரி பவானி அமுதநதி என்ற மூன்று ஆறுகளும் இங்குக் கூடுதலால், திரிவேணி சங்கமம் - தட்சிணப்பிரயாகை - திருமுக் கூடல்-கூடற்சங்கமம் என்றும், பற்பல காரணப் பெயர்கள் இதற்கு வழங்கும். இத் தலத்துக் கல்வெட்டுக்களில் 'திருவானி கூடல்' என்று இது குறிப்பிடப் பெற்றுள்ளது.

**தலவரலாறு:** மகாவிஷ்ணுவால் கொடுக்கப்பட்ட அமிர்தத்தைக் குடத்திலிட்டு வைத்துப் பராசர முனிவர் தாபித்த அமிர்த லிங்கேசர், மூலத்தானத்திற்கு நிருதி திக்கில் எழுந்தருளியுள்ளார். விசுவாமித்திரர் இங்கு இறைவனைப் பூசித்து வசிட்ட முனிவரால்'பிரமரிஷி'எனப் புகழப் பெற்றார். மகப் பேறு இல்லாது வருந்திய தந்துவ ருத்தனச் சோழ மன்னனின் மனைவி, இங்குப் பூசித்து இலந்தை மரத்தினின்று வீழ்ந்த கனியை யுண்டு மகப்பேறு பெற்றாள். மருத்தாசுரன், இலிங்கி விருடாகவி என்னும் இருவரும், விசுவதாமன் சங்கோசன் முதலியவர்களும் பூசித்துப் பல பாவங் களினின்று நீங்கினர். வேதவியாசர் பூசித்து வேதங்களை வகுக்க வல்லவர் ஆயினர். பிரமதேவர் வணங்கிப் படைப்புத் தொழில் செய்யும் வன்மை அடைந்தனர். வில்லியம் காரோ என்ற வெள்ளைக் காரத் துரைமகனார், இங்குள்ள அம்பிகையின் அருளால் தாம் ஓர் ஆபத்தினின்று உயிர் தப்பிய நிகழ்ச்சியின் நினைவாக, அம்பிகையின் பள்ளியறையில் வைக்க ஒரு தந்தக் கட்டிலை வழங்கியுள்ளார் (கி. பி. 1804).

**தீர்த்தங்கள்:** காவிரி, பவானி அமுதநதி என்பன, இத்தலத்தின் முக்கியமான தீர்த் தங்கள். அமுதநதி அந்தர்வாகினியாக (தரைக்குள் மறைவாக) ஓடுகின்றது, காயத்திரிலிங்கக் கோயிலுக்கு எதிரில் காயத்திரி தீர்த்தம், சாவித்திரி தீர்த்தம். சரசுவதி தீர்த்தம் என்பன உள்ளன. இவையன்றித் தேவ தீர்த்தம், சக்கர தீர்த் தம், சூரிய தீர்த்தம், உரோமசதீர்த்தம் என்னும் வேறு பல தீர்த்தங்களும் இங் குண்டு. ஆடி தை புரட்டாசி அமாவாசை நாட்களிலும், ஆடிப் பதினெட்டாம் பெருக்கிலும்; மாதப் பிறப்பு ஆண்டுப் பிறப்பு

சங்கராந்தி ஆகிய புண்ணிய நாட்களிலும், கிரகண காலங்களிலும் மக்கள் ஏராளமாக வந்து, காயத்திரி மடுவில் நீராடி இறைவனை வழிபட்டுச் செல்கின்றனர்,

**கோயில் அமைப்பு:** ஊரில் இருந்து கோயிலுக்குள் வடக்குவாயில் வழியாகத் தான் செல்லவேண்டும். ஐந்து நிலைகளுள்ள கோபுரம் வாயிலை அழகு செய்கின்றது. கோபுரத்திற்கு வெளியே விநாயகர் கோயிலும், ஆஞ்சநேயர் கோயிலும் வடக்கு நோக்கியிருக்கின்றன. இவைகளுக்கும் கோபுரத்திற்கும் இடையில் நந்தி மண்டபம் உள்ளது; கோபுரத்திற்கு உள்ளே நுழைந்ததும் இருமருங்கும் விநாயகரும், முத்துக் குமாரசுவாமியும் காட்சியளிக்கின்றனர். பிறகு காணப்படுவது ஆதிகேசவப் பெருமாள் சந்நிதி. இதற்கு வலப்புறம் சவுந்தர வல்லித் தாயார், சந்தான கோபால கிருஷ்ணன் சந்நிதிகளும், இடப்புறம் வேணுகோபாலரின் தெற்கு நோக்கிய சந்நிதியும், அமைந்திருக்கின்றன. வேணுகோபாலரின் திருவுருவம் அற்புதச் சிற்ப வேலைப்பாடுடையது. இது மைசூர் மன்னரால் செய்து வைக்கப்பட்டதாம். ஆதிகேசவர் சந்நிதியின் முன் மண்டபத்தின்மேல், இராமாயண கதை முழுவதும் கற்சிற்பங்களால் ஆக்கப் பெற்றிருக்கின்றன. தாயார் சந்நிதியில் ஒரு தூணில் கோதண்டராமர் திருவுருவம், கம்பீரமாகக் காட்சியளிக்கின்றது. மற்றொரு தூணில் சீதாராமர் அமர்ந்தகோலம். அவர் தம் திருவடிகளின் அருகில், அனுமான் வலக்கையில் வீணையும், இடக்கையில் தாளக் கட்டைகளும் கொண்டு பஜனை செய்யும் காட்சி, கவினுறத் திகழ்கின்றது. பாவு கல்லில் புலிக்காலும் யானைமுகமும் படைத்த ஓர் உருவம், கையில் வீணையுடன் விளங்குகின்றது. அதனை 'வீணை ஏந்தும் விநாயகர்' என்கின்னறர்.

பெருமாள் கோயிலுக்குச் சற்றுத் தெற்கே இலட்சுமி நரசிம்மர் சந்நிதியுள்ளது. திருவுருவம் அழகிய வேலைப்பாடு மிக்கது. அதற்குத் தெற்கே விசாலாட்சி விசுவநாதரின் கிழக்குப் பார்த்த தனிச் சந்நிதிகள் உள்ளன. இதற்கு அப்பால் வேதநாயகி அம்பிகை சந்நிதி யிருக்கின்றது. பண்ணோர்மொழி யம்மையின் அருள் கனிந்த திருமுகம், பார்க்குந் தோறும் பரவசம் அடையச் செய்கின்றது. முன்னுள்ள நிருத்த மண்டபத்தில் பத்துச் சித்திரத் தூண்களில் சிவனடியார்கள், திருப்பனிச் செல்வர்கள் ஆகியவர்களின் சிலைகள் செதுக்கியிருக்கக் காணலாம். அம்பிகை கோயிலுக்குத் தெற்கே ஆறுமுகர் சந்நிதி அமைந்திருக்கின்றது. அதற்கும் தென்புறம் சுரகரேசர் கோயில் உள்ளது. மூன்று கால்கள், மூன்று கைகள், மூன்று தலைகளுடன் அவர் காட்சி தருகின்றார். இவரை வணங்கினால் தீராத சுரநோய்களெல்லாம் தீர்ந்துவிடுகின்றன. இம்மூர்த்திக்குச் செவ்வாய், வியாழன், ஞாயிற்றுக் கிழமைகளில் மிளகுரசம், அறைக்கீரைச் சுண்டல் ஆகியவை, படைக்கப்படுகின்றன.

கோயிலுக்குத் தென் கடைசியில்தான் சங்கமேசுவரர் திருச்சந்நிதி இருக்கின்றது. கோயிலுக்கு வெளியில் தென்புறம் காவிரிக் கரையில் கிழக்கு நோக்கிக் காயத்திரி லிங்கக் கோயிலும், சகஸ்ர லிங்கக் கோயிலும், உள்ளன. இவைகளுக்கு மேல் புறம் அமுதலிங்கேசர் கோயில் உள்ளது. அமுதலிங்கம் சுயம்புமூர்த்தி, தனியே ஆவுடையார்மேல் வைக்கப்பட்டிருக்கின்றது. யாராவது பிரசவவேதனைப் பட்டால் அந்த வீட்டுக்காரர்கள் வந்து இலிங்கத்தைத் திருப்பி வைத்துப்போனால், பிரசவ வேதனை குறைந்துவிடுமாம். மகப்பேறு இல்லாதவர்கள் இந்த இலிங்கத்தை எடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டு ஆவுடையாரைச் சுற்றிவந்தால், மகப்பேறு உண்டாகும் என்ற நம்பிக்கை மக்களிடம் இருக்கிறது; ஆதலின் இந்தச் சந்நிதி, இரவு பகல் எந்நேரமும் திறந்து வைக்கப்பட்டுள்ளது.

**கல்வெட்டுகள்:** மற்ற கோயில்களிற் காணப்படுவது போல, இக்கோயிலிற் கல்வெட்டுக்கள் மிகுதியாக இல்லை. இம்முடிக் கட்டி முதலியார், கட்டி முதலியார் என்ற சிற்றரசர்களும், தேவராயன் என்ற தளவாயும், பல மண்டபத் திருப்பணிகள் செய்ததாகச் சில கல்வெட்டுக்கள் குறிக்

கின்றன. இறைவனின் சந்நிதித் தூண் ஒன்றில் திருப்பணி செய்த இம்முடிக்கட்டி முதலியார், அவர் மனைவியார் திருவுருவங்கள் உள்ளன. அம்பிகையின் சந்நிதித் தூண் ஒன்றில், கட்டி முதலியார் துறவியொருவரிடம் திருப்பணிக்காகப் பொற்கிழி கொடுக்கும்நிலையில் சிற்பம் செதுக்கப் பெற்றுள்ளது. அங்கே ஒரு தூணில் அழகிய பெண் ஒருத்தியின் உருவம் செதுக்கப்பட்டிருக்கின்றது. அதன் தலையில் தண்ணீரைக் கொட்டினால், அது சிரிப்பது போன்ற காட்சியளிக்கின்றது. அதைச் "சிரிக்கும்சிலை" என வழங்குகின்றனர். இக்கோயிலின் திருப்பணி அண்மையில் சிறப்புற நடைபெற்றுக் குடமுழுக்கு விழாவும் நன்கினிது நிகழ்ந்துள்ளது.

**சுவாமி பெயர் :** சங்கமேசுவரர். இரண்டு ஆறுகளின் நடுவில் இருப்பதால், நட்டாற்றீசர் எனவும் வழங்குவதுண்டு. கல்வெட்டுக்களில் திருநணுவுடையார் என்று காணப்படுகின்றது. அம்பிகையின் பெயர்: வேதநாயகி, வேதவல்லி, பொன்னார் மௌலி என்பன. கல்வெட்டுக்களில் பண்ணார் மொழி அம்மையார் என்று அழகாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றது.

## (4) திருக்கொடிமாடச் செங்குன்றூர் :

**இருப்பிடம் :** இது திருச்செங்கோடு என இப்போது வழங்கப்பெறும். இத்தலம் சங்ககிரிதுர்க்கம் என்ற இருப்புப் பாதை நிலையத்தில் இருந்து, தென் கிழக்கில் 6 மைல் அளவில் கற்சாலையில் அடையத்தக்கது. பேருந்து முதலிய வசதிகள் உண்டு. மலையடிவாரத்தில் இது பெருநகரமாக விளங்குகின்றது. மலை செங்குத்தாய் மிக்க உயரம் உள்ளது. ஏறித் தரிசித்து வருதல் சிறிது கடினம்.

**தல வரலாறு :** திருச்செங்குன்றூர், நாகமாமலை — இடபமலை — துர்க்கைமலை முதலிய பல பெயர்கள் இதற்கு வழங்கும். ஆதிசேடனுக்கும் வாயுவுக்கும் உண்டாகிய பூசலில், மகா மேருமலையின் ஆயிரம் சிகரங்களில் ஒன்று, அதனை மூடியிருந்த ஆதிசேடனுடைய ஒரு தலையுடன் பறிக்கப்பட்டு வீழ்ந்து மூன்று துண்டமாக, அதில் ஒன்று இம்மலையாயிற்று. அதனாற் பின்னர் இது நாகமலை எனப் பெயர் பெற்றது என்று புராணம் கூறும். மலையின் வடிவமும் ஒரு நாகம் போன்று இருத்தல் காணலாம். இத்தலத்தில் அம்மையார் தவஞ் செய்து இறைவனது திருமேனியில் ஒரு பகுதி தம்முடையதாகப் பெற்றனர். இதனையே அர்த்தநாரீசர் அல்லது 'மாதிருக்கும் பாதியர்' என்று சைவ நூல்கள் எல்லாம் விதந்து பேசும். இத்திருவுருவம் மூலத்தானத்தில் விளங்குகின்றது. இஃது இத்தலத்துக்கே சிறப்பாக உரியதாகும். இது திருப்பரங்குன்று போலச் சிவபெருமானது சிறந்த தலமாகவும், செங்கோட்டு வேலர் என்று வழங்கும் முருகப்பெருமானுடைய குன்று தோருடல்களில் ஒன்ருகவும் உள்ளது. அர்த்தநாரீசர் சந்நிதி மேற்கு நோக்கியும், செங்கோட்டு வேலவர் சந்நிதி கிழக்கு நோக்கியும் உள்ளன. இத்தலத்தில் முருகன் அம்பிகை விஷ்ணு பிரமன் துர்க்கை ஆதிசேடன் ஆகியோர் பூசித்துப் பேறுபெற்றனர். இத்தலம் விறல் மிண்ட நாயனார் அவதாரத் தலம்.

திருஞானசம்பந்த சுவாமிகள் இத்தலத்தைத் தமது பெருந்திரளான பரிசனங்களுடன் வந்து தரிசித்து "வெந்த வெண்ணீறு அணிந்து" என்ற திருப்பதிகம் பாடியருளினர். இங்கே தமது பரிசனங்களில் ஒரு பகுதியை இருக்கவைத்து, சில பரிசனங்களுடன் மேல் கொங்கில் உள்ள பவானி பேரூர் முதலிய சிவத்தலங்களைத் தரிசித்து மீண்டனர். இத்தலத்துத் திருப்பதிகத்தில் மாதிருக்கும் பாதியனாகிய திருக்கோலத்தையும், இறைவனின் நின்ற திருக்கோலத்தையும், சுவாமிகள் பலவாறு பாராட்டிப் பாடியிருத்தல் காணலாம். திருஞான சம்பந்தர் இங்கு நின்றும் புறப்பட்டுக் கொங்கிற்குடபுலத்துத் தலங்களைத் தரிசித்துத் திரும்பியபோது, இவ்வூரில் குளிர்சுரம் பரவி வருத்தம் செய்தது. அது தீர்தற்பொருட்டு "அவ்வினைக்கு இவ்வினையாம்" என்று தொடங்கும் திரு நீலகண்டத் திருப்பதிகத்தைப் பாடித் "தீவினை தீண்டப்பெறு" என்று ஆணையிட்டருளினார். அதனால் அந்நாடு முழுமையும் அப்பிணி தீர்ந்து மக்கள் யாவரும் இன்

புற்றனர். இன்றைக்கும் அத்திருப்பதிகத்தை நியமமாகப் பாராயணஞ் செய்தால், சுரம் முதலிய நோய்கள் நீங்கப் பெறுதல் கண்கூடு. விஷ்ணு சந்நிதியும் இக்கோயிலில் உண்டு. விஷ்ணுவுக்கு ஆதிகேசவப்பெருமாள் என்று பெயர்.

**கல்வெட்டுக்கள் :** பரகேசவரிவர்மனான முதலாம் இராசராசன், மதுரைகொண்ட முதற் பரகேசரிவர்மன், சுந்தர பாண்டிய தேவன், சொக்கப்ப நாய்க்கன், சொக்க லிங்க நாய்க்கன், மைசூர் கிருஷ்ணராஜ உடையார் முதலிய அரசர்களின் கல்வெட்டுக்கள், இங்குக் காணப்படுகின்றன. அவற்றால் அறியப்படுவன பெரும்பாலானவை அந்தணர்களுக்கு அன்னதானமும், யாத்திரை செய்வோர்க்கு உணவும், விளக்கிற்கு நெய்யும் அளிக்கப்பட்ட நிபந்தங்களேயாகும். 192 முதல் 194 வரையிலுள்ள கல்வெட்டுக்கள் சுப்பிரமணியப் பிள்ளையார் கோயிலைப்பற்றி அறிவிக்கின்றன. கி. பி. 1660 முதல் 1772 வரை அரசாண்ட விசுவநாத சொக்கலிங்கர், காசிவிசுவேசர் கோயிலையும் கோபுரத்தையும் இங்குக் கட்டினர்.

**சுவாமியின் பெயர் :** அர்த்தநாரீசுவரர், மாதியலும் பாதியன். அம்மை பெயர்: பாகம்பிரியாள், அர்த்தநாரீசுவரி. அர்த்தநாரீசுவரரின் பாதத்தில் ஒரு சிறு ஊற்று அமைந்துள்ளது.

— ஆசிரியர்.

---

## செய்திச் சுருக்கம்

**குடமுழுக்கு விழா:** காரைக்குடி திரு ந. மு. இலட்சுமண செட்டியார் குடும்பத்தினர், 1910-ஆம் ஆண்டு திருவாவினன்குடிக் கோயிலின் கருவறை அர்த்தமண்டபம் மகாமண்டபம் ஆகியவற்றைப் புதுப்பித்துக் கருங்கல் திருப்பணி செய்து குடமுழுக்குவிழா நடத்திவைத்தனர்.

அண்மையில், இக்கோயிலுக்குப் புதிதாக இராசகோபுரம்-முன்மண்டபம்-வெளிச்சுற்று மதில் ஆகியவைகளும், சொக்கலிங்கேசுவரர்-மீனாட்சியம்மை-அண்ணாமலை ஈசுவரர்-உண்ணாமுலையம்மை - தட்சிணாமூர்த்தி - பத்திரகாளி ஆகியவர்களின் சிறு கோயில்களும், கட்டி முடிக்கப்பெற்றன. இராசகோபுரத்திற்கு 7 பொற்கலசங்களும், மூலவர் விமானத்திற்குப் பொற்கலசமும் அமைக்கப்பெற்றன.

சுமார் ஐந்து லட்சம் (5,00,000) ரூபா செலவில், திருப்பணி செய்து முடிக்கப் பெற்றதனை ஒட்டி, இக்கோயிலின் குடமுழுக்கு விழா, 27—6—68 முதல் 5—7—68 வரை, மிகவும் சிறப்புற நடைபெற்றது. 20 ஓமகுண்டங்களில் 40 சிவாசாரியர்கள் இருந்து, திருவாடானை திரு. அய்யாமணி சிவம் அவர்கள் தலைமையில், ஓமங்கள் செய்து பூசைகள் நிகழ்த்தினர். விழா நாட்களிற் காலை மாலை வேளைகளில் வேதபாராயணம், திருமுறை இன்னிசை, சமயச் சொற்பொழிவு, இசையரங்கு என்பன யாவும், சிறப்புற நடைபெற்றன.

அறநிலைய ஆணையர் திரு ஆ. இராதாகிருஷ்ணன் எம்.ஏ.,பி.எல்., மதுரைத்துணை ஆணையர் திரு பி. ஆர். பக்கிரி சங்கர், எம்.ஏ.,பி.எல்., உதவி ஆணையர் திருகே. சிதம்பரம், பி.ஏ. திரு ஜி. சின்னதுரை, திரு ஆர். கோதண்டபாணி, துரைராஜ நாடாள்வார், திரு சி. டி. தண்டபாணி எம்.பி., நிர்வாக அதிகாரி, திரு சி. எஸ். தீனதயாளு பி.எஸ்ஸி., பி.எல். முதலிய பெருமக்கள் பலரும், பெருந்திரளான பக்தர்களும் விழாவிற்கலந்து கொண்டு, முருகனைத் தரிசித்து மகிழ்ந்தனர்.

விழா நிகழ்ச்சிகட்கு உரிய எல்லா ஏற்பாடுகளையும், கோயிற் பணியாளர்களும், நிர்வாக அதிகாரி அவர்களும், மிகவும் திறம்படச் செய்திருந்தமை, பெரிதும் புகழ்ந்து பாராட்டத் தக்கதாகும்.

—ஆசிரியர்.

# திருப்பாவைச் செழும்பொருள்

(முற்றொடர்ச்சி)

கறவைகள் பின்சென்று
கானம்சேர்(ந்து) உண்போம்!
அறிவொன்றும் இல்லாத
ஆய்க்குலத்(து) உன்தன்னைப்
பிறவி பெறுந்தனைப்
புண்ணியம் யாமுடையோம்!
குறைவொன்றும் இல்லாத
கோவிந்தா! உன்தன்னோ(டு)
உறவேல் நமக்(கு) இங்(கு)
ஒழிக்க ஒழியா(து);
அறியாத பிள்ளைகளோம்
அன்பினால் உன்தன்னைச்
சிறுபேர் அழைத்தனவும்
சீறி யருளாதே!
இறைவா நீ தாராய்:
பறைஏலோர் எம்பாவாய்!

கறவைகள்: அறிவு கேட்டுக்கு எடுத்துக் காட்டான பசுக்கள்.

பின்சென்று: தேவரீரைப்பெறுகைக்குக் குருகுலவாசம் பண்ணினாற்போலே, நீங்கள் அவற்றின் பின்னே சென்றுய்த்து இத்தனை காலமும் திரிந்தது. வசிஷ்டர் முதலிய மகரிஷிகளுக்குச் சாதாரண மக்களைவிட எவ்வளவு உயர்ந்த ஞானம் உண்டோ, அவ்வளவு உயர்ந்த ஞானம் இடையர் சிறுமிகளாகிய எங்களைக் காட்டிலும் பசுக்களுக்கு உண்டு என்கிறார்கள்.

'காலிகள் பின்சென்று' என்னாதே 'கறவைகள் பின்சென்று' என்றது, தர்மபுத்தியினால் பசுக்களை மேய்த்துக் காத்திலோம்; எங்கள் சுயநலம் கருதியே அவற்றை மேய்த்துக் காத்தோம் என்கைக்காக.

கானம் சேர்ந்து: ஒரு நன்மைக்கு உடலாகும் மனிதர் திரியும் நாட்டில் வர்த்தித்திலோம்; புல்லுள்ள காட்டிலே வாத்தித்தோம்; பசுக்களுக்குப் புல்லும் நீரும் உள்ள இடம் தேடி அவ்விடத்தே அலைந்து திரிந்து போந்தோம். காடுகளிலும் தண்டகாரண்யம், நைமிசாரண்யம் பதரிகாச்ரமம் போன்ற புனிதமான காடுகளிலே சென்று சேர்ந்து திரியப் பெற்றிலோம் என்கைக்காக, ஒரு அடைமொழியும் கொடாமல் வறிதே 'கானம்' என்கிறார்கள்.

உண்போம்: நாங்கள் கறவைகளின்பின் சென்றது அவற்றின் பொருட்டு அன்று, வயிறு வளர்க்கைக்காகவே செய்தோம். உதர போஷணமே எமக்குப் பரம புருஷார்த்தம். காட்டில் போனால் புழுதியும் வியர்ப்பும் போகக் குளித்து உண்டறியோம். அருகிருந்தார் கையிலே ஒருபிடி இட்டறியோம். இருந்துண்ண வேணும் என்கிற நிர்ப்பந்தம் இன்றி, நின்று கொண்டும் சென்று கொண்டும் உண்போம். பசுககள் அசையிடாது இருப்பினும் நாங்கள் புசியாதிருப்பதில்லை.

அறிவொன்றும் இல்லாத: பகவத் ஞானத்துக்கு அடியான ஆத்மஞானமும் இல்லை, தத்சாத்தியமான பக்தியும் இல்லை. பக்தியாவது ஞான விசேஷம்.

அறிவில்லை என்கிறதும் ஒரு அறிவின் காரியமிறே எனின், பேற்றுக்கு உடலாகத் தங்கள் தலையால் வரும் அறிவை இவர்கள் இல்லை என்கிறார்கள். ஞான தவ்யங்களாய் இருக்குமவை ஒன்றிலும் எமக்கு அறிவில்லை என்கிறார்கள். ஆகார சுத்தி உண்டானாலன்றோ ஞானம் பிறப்பது, ஊணார்க்கும் உண்டோ உணர்வு?

ஆய்க்குலம்: அறிவு உண்டென்று ஐயப்பட ஒண்ணாத குலம்; அறிவில்

லாமை எங்கள் பிறவியிலேயே அமைந்தது என்கிறார்கள்.

இராவணன் துர்விருத்தன் என்கைக்கு அடி என் என்ன, இராட்சசன் என்றாற் போலேயும்; 'ஏழை ஏதலன்' என்கைக்கு அடி என் என்னக் 'கீழ்மகன்' என்றாற் போலேயும்; அறிவில்லாமைக்கு "ஆய்க் குலம்" என்கிறார்கள்.

**ஆய்க்குலத்து உன்றன்னை:** நீ எங்கள் குடியிலே விரும்பி வந்து பிறக்கும்படி யன்றோ எங்கள் பேறு. இமையோர் தம் குல முதலான உன்னை ஆயர்குல முத லாகப் பெற்றோம். வெங்கதிரோன் குலத் தைக் காட்டிலும் இக்குலத்திற்கு உண் டான வாசி பாராய் நீ பகல் விளக்கான குலமும், நீ அணிவிளக்கான குலமும் ஒக்குமோ?

**பிறவி பெறுந்தனை:** உலகத்தோர் வழிபடத்தக்கவர்இருந்த இடத்தைப் போய் வழிபடுவர். அவர்களைப் போலேயோ நாங்கள்! வழிபடத்தக்கவனான நீதான் நாங்கள் இருந்த இடத்தே நாடிவந்து, எங்களோடு ஓர் இனத்தவனாய்ப் போந்து அவதரிக்கும்படியன்றோ எங்களுடைய ஏற்றம். புண்ணியத்தை உன்னாலே தேட லாம். உன்னைப் பெறுகைக்குத் தக்க புண்ணியம் வேணுமிறே. புறம்பே உண் டான புண்ணியங்களை உன்னாலே பெற லாம். உன்னைத் தரவல்லது, உன்னில் விஞ்சினதில்லையே. 'கிருஷ்ணம் தர்மம் சநாதனம்' என்கிற சநாதன தர்மம் நீயே இறே. பறைதரும் புண்ணியனே இறே தன்னையும் தருவது; பிறக்கைக்கு ஏதுவே யிறே தருகைக்கும் ஏது.

**யாம் உடையோம்:** தேவகி பெற்று உடையவள் ஆனாள், நாங்கள் பிறந்து உடையோம் ஆனோம். நினைத்தபடி விநி யோகம் கொள்ளலாம்படி கைப்புகுந்த உன்னை உடையோம் அன்றோ.

**குறையொன்றும் இல்லாத:** அரசர்கள் வழி போம்போது, மேடு பள்ளம் சமன் செய்ய விட்டன்றோ போவது. இராம பிரான் கடலைத் தூர்த்து வானர சேனையை நடத்தினாற் போலே, உன் குறைவில்லா மையை எங்கள் குறைவிலே இட்டு நிரவிச் சமன் செய்துகொள்ளும் இத்தனையன்றோ. குறைவாளரை ஒழிய நீ நிறைவாளனும்படி எங்ஙனே? ஒரு மேட்டுக்கு ஒரு பள்ளம் நேர் அன்றோ. எங்கள் அபூர்த்தியை ஆராயும்படியாகவோ உன்னுடைய பூர்த்தி இருப்பது.

**கோவிந்தா:** நீயோதான் சால அறிவு உடையையாய் இருக்கின்றாய். உனக்குச் சொரூப ஞானம் உண்டாகில் நித்திய சூரிகள் நடுவே பரமபதத்தில் இராயோ. அவனுடைய அறியாமையிறே நமக்குப் பற்றாசு. நீ 'அயர்வறும் அமரர்கள் அதி பதி' என்று உன்னை அறிந்தாயாகில், நீ பசுக்களின் பின்னே போகப் பெறுதியோ. அவன் தன்னை அறிந்தாலும் பெற விரகு இல்லை; நம்மை அறிந்தாலும் பெற விரகு இல்லை. அவன் தன் சுவாதந்தர்யத்தையும் மறக்கையிறே நமக்குப் பெறலாவது.

**கோவிந்தா:** கடையாவும் கழிகோலும், கையிலே பிடித்தக் கண்ணிக்கயிறும், கற்றுத் தூளியாலே புழுதி படிந்த திருக் குழலும், மறித்துத் திரிகிறபோது திருவடி களிலே கிடந்து ஆரவாரிக்கின்ற கழல் களும் சதங்கைகளும், குளிர்முத்தின் கோடாலமுமாய் நிற்கிற உபாய வேஷத் தைக் 'கோவிந்தா' என்கிறார்கள்.

**உன் தன்னோடு உறவேல்:** உன்னோடு எங்களுக்கு உண்டான சம்பந்தம் உலகத் தார் உறவுபோல ஒரு குட நீரோடே போகிறதொன்று அன்று; அனாதி நித்திய சம்பந்தம்.

**ஒழிக்க ஒழியாது:** அது உன்னாலும் விடவொண்ணாது, அது எங்களாலும்விட வொண்ணாது, இருவரும்சேர்ந்து முயன்று பார்த்தாலும் விடவொண்ணாது; "நான் உன்னையன்றி இலேன் கண்டாய் நாரணனே நீ என்னையன்றி இலை" என்கிற பிரமாணம் கேட்டறியாயோ?*

---

* "I know that without me
God can no moment live;
Were I to die, then he
No longer could survive."
—**Angelus Silesius.**

என்பது, ஈண்டு ஒப்பு நோக்கி யுணர்ந்து மகிழத் தகுந்தது.

**அறியாத பிள்ளைகளோம்:** முதலிலே அறிவிலாதார் செய்தது பொறுக்க வேணும்; சிறுவர் செய்தது பொறுக்க வேணும்; நண்பர் செய்தது பொறுக்க வேணும். கவனக்குறைவாலே சொல்லுவது அறிந்திலோம். பிள்ளைமையாலே சொல்லுவது அறிந்திலோம். பிரேமத்தால் வந்த கலக்கத்தாலே சொல்வது அறிந்திலோம். எங்களாலே அறிவு கெட்டோம். பிறவியாலே அறிவு கெட்டோம். உன்னாலே அறிவு கெட்டோம். யாதும் ஒன்றறியாத பிள்ளைகள் இறே நாங்கள். அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலத்திலே பிறக்கையாலே அறிவு கெட்டோம். 'அழகு கண்டு என்மகள் அயர்க்கின்றது' என்கிறபடியே உன்னைக் கண்டு மதிகெட்டோம். 'அறிவு அழிந்தனர் ஆய்ப்பாடி ஆயர்' என்று இடையரை மதிகெடப் பண்ணுமது பெண்களை மதிகெடுக்கச் சொலல வேணுமோ? "பித்தர் சொல்லிற்றும் பேதையர் சொல்லிற்றும் பத்தர் சொல்லிற்றும் பன்னப் பெறுவரோ" என்று பிரசித்தமன்றோ.

**அன்பினால்:** பிரேமாந்தரைக் குற்றங் கொள்ளுகையானது, ஒரு படுக்கையிலே இருந்து கைதாக்கிற்று கால் தாக்கிற்று என்கையிறே. கவனக் குறைவாலும், பிள்ளைமைப் பருவத்தினாலும், பிரேமத்தினாலும்நேர்ந்த எங்கள் அறியாமையைப் பொறுக்க வேணும்.

**உன்றன்னை:** கோவிந்த அபிஷேகம் பண்ணியிருக்கிற உன்னை; அன்பு விளைக்கைக்கு நிமித்தமாக இருக்கிற உன்னை.

**சிறுபேர்:** இப்போது 'சிறுபேர்' என்று நினைப்பது நாராயணன் என்பதை. கோவிந்தாபிஷேகம் பண்ணின பின்பு, முதல் திருநாமம் சொல்லுகை குற்றமிறே. முடி சூடினவனைத் தட்டியில் பேர் சொல்லுகைக்கு மேற்பட உண்டோ குற்றம்? ஊடினால் சொல்லுவதனைப் படுக்கைத் தலத்தில் சொல்லலாமோ? உபயவிபூதிக்கும் முடிசூடினதுக்கு அவ்வருகே ஓர் ஐசுவர்யம் இறே இது. 'நாராயணன்' என்கிற பெயர் நாராயண பரங்களான பிரமாணங்களுக்குச் சொல்லலாம்; கோவிந்தா சக்தமான மனமுடையார்க்குச் சொல்லுகை குற்றம். மேன்மைகள் தவிர்ந்துதாழ நின்று நீர்மை சம்பாதிக்கப் போந்த இடத்தில், மேன்மை சொல்லுகை குற்றம் இறே.

சகஸ்ர அட்சரங்கள், துவாதச அட்சரங்கள் தொடக்கமான பெரும்பேர்களெல்லாம், அவன் பெயர் எட்டெழுத்தையும் கண்டவாறே சிறுகிற்று; அதுதான் மூன்றெழுத்துடைய பெயரைக் கண்டவாறே சிறுகிற்று. வாச்சியன் சிறுக நின்று நிறம்பெற்றால் வாசகமும் அப்படியிறே.

**அழைத்தான்:** அது தன்னையும் ஒரு கால் சொல்லிவிடாதே 'நாராயணனே' என்றும், 'நாற்றத் துழாய்முடி நாராயணன்' என்றும், 'நாராயணன் மூர்த்தி' என்றும் பலகால் சொன்னார்களிறே. அதன்மேலும் 'பாழியந்தோளுடைப் பற்பநாபன்' என்றார்களிறே. அதனால் 'அழைத்தன' என்று பன்மை வாசகத்தாற் குறிக்கின்றார்கள்.

தங்களில் சினத்தினாலே "பேய்ப் பெண்ணே! ஊமையோ! செவிடோ! நாணாதாய்! பண்டே உன்வாய் அறிதும்" என்று தொடங்கிச் சொல்லியவற்றையும் பொறை கொள்ள நினைத்தார்கள், எனினுமாம். புகுதருவான்நின்றவற்றில், புத்தி பூர்வகத்துக்குப் பொறுத்தருளும்படி வேண்டுகிறார்கள்.

**சீறியருளாதே:** பகவத் பாகவத விஷயங்களில் உபசார முறையாற் பண்ணும் அபசாரங்களுக்கு க்ஷமை (மன்னிப்பு) கொண்டுவிட வேணும். சுலபனைப் பரன் என்கிறதுதான் அபசாரமாகிற தசையிறே. குளிர்ந்த தண்ணீரை விநியோகம் கொள்ளுவோனுக்குக் காய்ச்சின தண்ணீர் பகையிறே. கிருஷ்ணனுடைய ஆற்றலுக்கு ஈஸ்வரத்துவத்தால் வந்த அழல் பகை இறே.

பேற்றுக்குப் பயன்படுவது புறம்பே கிடக்க, பயன்படாதனவற்றைக் கிடந்து ஆராய்கிறது ஏன்? என்று, 'சீறியருளாதே' என்கிறார்கள் எனினுமாம்.

இறைவா: நீ 'தருவோம்' என்ற அன்று விலக்குகைக்கு உரியார் உண்டோ? வானோர் இறையை நினைத்ததன்று, ஆய்க் குலமாய் வந்து தோன்றின எம் இறை. தன் கைகால் தப்புச் செய்தது என்று பொடிய விரகு உண்டோ? உடைமையை இழக்கை உடையவன் இழவன்றோ? "பிழைப்பர் ஆகிலும் தம் அடியார் சொற் பொறுப்பது பெரியோர் கடன் அன்றே". நீ இறைவன் ஆகைக்கும் சீறுகைக்கும் என்ன சேர்த்தியுண்டு. "செய்த குற்றம் நற்றமாகவே கொள் ஞால நாதனே" என்கிறார்கள்.

நீ: காத்தருளுதற்குக் கடமைப் பட்டவனான நீ.

பறை தாராய்: ஸாது பரித்ராணம் (நல்லோரைக் காத்தல்) செய்தற் பொருட்டன்றோ நீ இங்கு வந்து பிறந்தருளிற்று. அவள் தருவது தந்தாள்: நீ தருவதனைத் தாராய். உபாய நிஷ்டையன்றோ அவள் தருவது, பேற்றுக்கு நீயே உபாயமாக வேணும் என்று கிருஷ்ணனை வேண்டுகின்றார்கள்.

உன்னைப் பாராதே எங்களைப் பார்த்தாயாகில் இழக்கிறோம்; எங்களைப் பாராதே உன்னைப் பார்த்தாயாகில் பெறுகிறோம். ஆனபின்பு எங்களைக் காத்தலை உன்னாலே விட இயலுமோ? எங்களுக்கு வயது அறிவு பிறவிகளால் நன்மையில்லை; நீயே எங்கள் நன்மைக்குக் காரணன்; நீ குறைவிலா நிறைவினன்; அன்பர்க்கு எளியன்; உன்னோடு எங்களுக்கு ஒழியாத உறவு உண்டு; எங்கள் பிழைகளுக்குப் பெரிதும் இரங்குகின்றோம்; உன்பாற் பொறை கொள்கின்றோம்; எம்மால் இனிச் செய்யலாவது ஏதும் இல்லை; இனி உன்னை இழவாமல் எமக்கு நலம் செய்தருளப்பாராய் என்று கிருஷ்ணனை வேண்டுகிறார்கள். (28)

—(தொடரும்)

---

## செய்திச் சுருக்கம்

தொடக்கவிழா:— அருள்திரு. நொச்சூர் சிவயோகி சித்தானந்த சுவாமிகள் அவர்களின் திருவுளப்பாங்கின்படி, உருவாகிய 'விசுவ பிரேம சபை'யின் சென்னைக்கிளைத் தொடக்கவிழா, தியாகராயநகர் சிவவிஷ்ணு கோயிலில், 26—7—68 அன்று, சிறப்புடன் நிகழ்ந்தது. அகில இந்திய சாயி சமாஜம் ஸ்ரீஇராதாகிருஷ்ண சுவாமிகள், ஸ்ரீகோபால கிருஷ்ண பாகவதர், திருமதி இராஜேசுவரி, திரு சு. வேம்பு, திருமதி சௌந்தரா கைலாசம், திரு சுகப்பிரம்மம் இராமசுவாமி சாஸ்திரிகள், புலவர் திரு ந. ரா. முருகவேள், M.A., M.O.L, திரு சங்கு சுப்பிரமணியம், டாக்டர் திரு சீனிவாச ராவ், சித்தூர் திரு வி. நாகையா, திரு ஜாவர் சீதாராமன் முதலிய பெருமக்கள் பலர், கலந்துகொண்டு சொற்பொழிவாற்றினர்.

அதன் அடுத்த கூட்டம், சென்னைக் கோகலே மண்டபத்தில் 27—7—68 அன்று நடைபெற்றது. திருமதி லலிதா பாரதி, திருவாளர்கள் இரா. சுராஜ், டாக்டர் டி. எம். பி. மகாதேவன், M.A., Ph. D., சுகப்பிரம்மம், மூக்கையா தேவர், M L.A., அரங்கசாமித் தேவர், சீமைச்சாமி, M.L.A., அழ. வள்ளியப்பா, சுப. அருணசலம் ஆகிய பெருமக்கள் பலர், கலந்துகொண்டு சிறப்பித்தனர்.

அதனை அடுத்து 28—7—68அன்று, மயிலாப்பூர் அகில இந்திய சாயி சமாஜம் அரங்கில் நடைபெற்ற கூட்டத்திற்குத் திரு எம். பக்தவத்சலம் B.A., B.L., தலைமை தாங்கினார்கள். திருமதி குருவாயூர் பொன்னம்மாள், திருவாளர்கள் எஸ். சேஷாத்திரி, கி. வா. ஜகந்நாதன், M.A., சுகப்பிரம்மம், கனம் திரு கே. எஸ். வெங்கட்ராமன், I.C.S., திரு எஸ். ஒய். கிருஷ்ண சுவாமி, I.C.S., திரு சாண்டில்யன் ஆகிய பெருமக்கள் கலந்துகொண்டு உரையாற்றிச் சிறப்பித்தனர்.

மூன்று நாட்களிலும் முறையே திரு குஞ்சுமணி, திரு தமிழ்மணி, திரு எம். ஏ. மஜீத் ஆகியவர்களின் இசை நிகழ்ச்சிகள், சிறப்புற நடைபெற்றன. திரு தமிழழகன் அவர்கள் தலைமையில், "தெய்வத் தமிழ்" என்னும் பொருள் பற்றிய கவியரங்கம் ஒன்று நடைபெற்றது. 15 கவிஞர்கள் கலந்துகொண்டு 'கவிமழை' பொழிந்தனர். இம்மூன்று நாட்களிலும், அருட்டிரு நொச்சூர் சுவாமிகள் அவர்கள், "அகத்திய கீதம்" என்னும் பாடல்கள் பலவற்றைப் பாடி மகிழ்வித்து, அன்பர்களுக்கு அருளாசி வழங்கினர்.

—ஆசிரியர்.

## 1967–ஆம் ஆண்டிற்கான தூய்மைப் பரிசளிப்புக்காகத் தேர்ந்தெடுக்கப்பெற்றுள்ள

## திருக்கோயில்களின் பெயர் விவரங்கள்

1. சிதம்பரம் வட்டம் வளையமாதேவி: வேதநாராயணப் பெருமாள் கோயில்.
2. நன்னிலம் வட்டம் திருக்கண்ணபுரம்: சௌரிராசப் பெருமாள் கோயில்.
3. திருநெல்வேலி மாவட்டம் சங்கரன் கோயில்: சங்கர நாராயணசுவாமி கோயில்.
4. சென்னை மாநகர் ஐயனார்புரம்: காசிவிசுவநாத சுவாமி கோயில்.
5. காஞ்சிபுரம் வட்டம் பழையசீவரம்: லட்சுமி நரசிம்ம சுவாமி கோயில்.
6. வேலூர் வட்டம் செண்பாக்கம்: செல்வ விநாயகர் கோயில்.
7. கடலூர் வட்டம் திருவதிகை: வீரட்டானேசுவரர் கோயில்.
8. திருச்செங்கோடு வட்டம் பூலாம்பட்டி: கைலாசநாதர் கோயில்.
9. பொள்ளாச்சி நகரம்: மாரியம்மன் கோயில்.
10. தஞ்சை வட்டம் சுந்தர நாடு: சுந்தரேசுவரர் கோயில்.
11. மாயூரம் நகரம்: காசி விசுவநாதர் கோயில்.
12. கருவூர் வட்டம் வெண்ணைமலை: பாலசுப்பிரமணிய சுவாமி கோயில்.
13. மதுரை மேலூர் வட்டம் மேலூர்: கலியாண சுந்தரேசுவரர், காமாட்சி அம்மை கோயில்கள்.
14. சாத்தூர் வட்டம் சாத்தூர்: சிதம்பரேசுவரர் கோயில்.
15. அம்பாசமுத்திரம்: அகத்தீசுவரர் கோயில்.
16. தோவாலை வட்டம் கண்ணன்புதூர்: இராமவிநாயகர் கோயில்.

[ பரிசுகள் 1968 ஆகஸ்டு மாதத்தில் வழங்கப் பெறும். ]

## மதிப்புரை

**திருநெறியதமிழ்:** இது, மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் தெற்கு ஆடி வீதியில் உள்ளதும், சிவதரும பாஸ்கரர் திரு ம. க. சுந்தரேச பட்டர் அவர்களைத் தலைவராகக் கொண்டதும், ஆகிய பன்னிருதிருமுறை மன்றத்தின் சார்பில் வெளிவரும் ஒரு சிறந்த திங்கள் இதழ். இதன் ஆனிமாத இதழ், மாணிக்கவாசகர் குருபூசை விழா மலராக வெளிவந்துள்ளது. மாணிக்கவாசகர், கோலமும் சீலமும், சைவ நெறித் திருநீற்றின் ஒளி முதலிய கட்டுரைகள், செய்திகள் முதலியன மலரை அணிசெய்கின்றன. மணிவாசகர் திருவுருவமும், திருவாதவூர்க் கோயில் கோபுரத்தின் தோற்றமும், மலருக்குச் சிறப்பை அளிக்கின்றன. சிவநெறியிலும் செந்தமிழிலும் அன்பும் ஆர்வமும் உடையவர் அனைவரும் வாங்கிப் படித்துப் பயன்பெறத் தகுந்த நல்ல சிறந்த இதழ்! கிரவுன் சைஸ், 32 பக்கங்கள் கொண்டது. ஆண்டுக் கட்டணம் ரூபா இரண்டு. தனிப்பிரதி விலை 20 காசு. கிடைக்குமிடம்: பன்னிருதிருமுறை மன்றம், தெற்கு ஆடிவீதி, மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில், மதுரை-2.

—ஆசிரியர்.

# மகாபாரதம்

அருண்மொழியரசு

திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்.

பராசரர் யோகசக்தியினுல் பனியை உண்டாக்கினுர். திருநீற்றையிட்டு நதியின் நடுவில் ஒரு திட்டை உண்டாக்கினுர். "பெண்மணியே! நீ மீளவும் கன்னியாக ஆய்விடுவாய். உனக்கு என்ன வரம் வேண்டுமோ கேள்" என்ருர். அவள் தன் மேனி நன்மணமாக இருக்கும் வரத்தைக் கேட்டாள். அவர் அதன்படியேஒருயோசனை தூரம் மணம் வீசும்படிச் செய்தார். அதனுல் அவள் பரிமளகந்தி யென்ற நாமத்தைப் பெற்ருள். பின்னர் அவளிடத்தில் அவர் மேலான கருவைத் தந்தார். அப்போது அவள் திருவுதரத்திலிருந்து சோதிமயமான ஒரு புதல்வர் பிறந்தார்.

த்வீபத்தில் பிறந்ததனுல் அவர் கிருஷ்ணத்வைபாயனர் என்ற பேர் பெற்ருர். (த்வீப+அயனம்) த்வீபமாகிய அயனம் என்று பொருள். அவர் தாயாரை வணங்கி, நினைத்தபோது வருவேன் என்று கூறி விட்டுச் சென்ருர். வேதங்களை வகுத்ததனுல் வியாசர் என்னும் பேர் பெற்ருர். சுமந்து, ஜைமினி, பைலர், சுகர் என்ற நால்வர்கட்கும் நான்கு வேதங்களைப் பயிற்றுவித்தார். வைசம்பாயனமுனிவருக்கு ஐந்தாவது வேதமாகிய மகாபாரதத்தையும் ஓதுவித்தார்.

## உலக உற்பத்தி

ஜனமேஜயரே! திருமாலின் நாபியிலே பிரமதேவர் தோன்றினுர். பிரமதேவர் மரீசி, அத்திரி, அங்கிரசு, புலத்தியர், புலகர், கிரது, என்ற ஆறு புதல்வர்களை மனத்தினுல் உண்டாக்கினுர்.

மரீசியின் புதல்வர், காசிபர்.

பிரமதேவருடைய வலக்கட்டை விரலிலிருந்து தக்கன் பிறந்தான். இடக்கட்டை விரலிலிருந்து வேதவல்லி பிறந்து தக்கனை மணந்து கொண்டாள். தக்கனுக்கு 50 பெண்கள் பிறந்தார்கள். பத்துப் பெண்களைத் தருமதேவதை மணந்துகொண்டார். பதின்மூன்று பெண்களைக் காசிபர் மணந்து கொண்டார். இருபத்தேழு பெண்களைச் சந்திரன் மணந்தான்.

தருமதேவதை மணந்துகொண்ட பெண்களின் பேர்கள், கீர்த்தி, லட்சுமி, திருதி, மேதை, புஷ்டி, சிரத்தை, கிரியை, புத்தி, லஜ்ஜை, மதி*

காசிபருடைய மனைவியர் பதின்மூவரின் பேர்கள், அதிதி, திதி, தனு, காலை, தனுவு, ஸிம்ஹிகை, குரோதை, பிராதை, விக்வை, வினதை, கபிலை, முனி, கத்ரு.

காசிபருக்கு அதிதியிடம் ஆதித்தர்கள் பன்னிருவர்கள் பிறந்தார்கள். அவர்களது பேர்கள் முறையே,

தாதா, மித்ரன், அர்யமா, சக்ரன், வருணன், அம்சன், பகன், விவஸ்வான், பூஷா, ஸவிதா, துவட்டா, விஷ்ணு,

---

| | | | |
|---|---|---|---|
| * 1. | திருதி | — | திருப்தி. |
| 2. | மேதை | — | ஸ்திரபுத்தி, |
| 3. | புஷ்டி | — | தேகபலம். |
| 4. | சிரத்தை | — | நம்பிக்கை. |
| 5. | கிரியை | — | செய்கை. |
| 6. | புத்தி | — | நிச்சயம். |
| 7. | லஜ்ஜை | — | வெட்கம். |
| 8. | மதி | — | அறிவு. |

இந்தக் குணங்களின் அதிதேவதைகள்.

திதியின் புதல்வன் இரண்ய கசிபு.

இரணியனுடைய புதல்வர்கள் பிரஹலாதன், ஸம்ஹ்லாதன், அனுஹலாதன், சிபி, பாஷ்கலன் என்ற ஐவர்கள்.

பிரஹலாதனுடைய மைந்தர்கள் விரோசனன், கும்பன், நிகும்பன் என்பவர்கள்.

விரோசனனுடைய மைந்தன் பலி. பலியின் மகன் சிவபக்தனுகிய வாணன்.

காசிபருடைய மனேவியான தனுவின் புதல்வர்கள் தானவர்கள் நாற்பதின்மர், விகப்ரசித்தி, சம்பரன், நமுசி, புலோமன் முதலியோர்கள் என்று அறிக.

காசிபருடைய மற்ருெரு மனேவி, சிம்ஹிகை ராகு முதலிய புதல்வர்களேப் பெற்ருள்.

குரோதையின் புதல்வர்கள் கொடிய குரோதர்கள்.

காலேயின் புதல்வர்கள் காலகேயர்கள்.

பிருகு முனிவருடைன் புதல்வர்சுக்கிரர். இவர் மழைக்கு அதிதேவதை.

சுக்கிரருக்கு, துவஷ்டா அத்திரி, ரௌத்திரன், கர்மி என்ற நான்கு புதல்வர்கள்.

சித்திரரதன், சாலிசிரவசு, பர்ஜன்யன், கலி, நாரதர் முதலிய தேவகந்தர்வர்கள், முனி என்பவருடைய புதல்வர்கள்.

சுபகாதேவி தேவரிஷியிடம் ரம்பை முதலிய அப்ஸரசுகளேப் பெற்ருள்.

காசிபருடைய மனேவி கபிலே என்பாள் வசுக்கள் கந்தர்வர்கள் இவர்களேப் பெற்ருள்.

பிரமபுத்திரராகிய அங்கிரஸ் என்பவருடைய புதல்வர்கள் பிரகஸ்பதி, உதத்தியர், சம்வர்த்தர் என்பவர்கள்.

புலஸ்தியரிடமிருந்து இராக்கதர்கள், கின்னரர்கள்யட்சர்கள்† பிறந்தார்கள்.

புலகரிடமிருந்து ‡ கிம்புருடர்கள், சரபங்கள், சிங்கம், புலி, கரடி, ஓநாய் முதலியன பிறந்தன.

கிருது என்பவரிடமிருந்து சூரியனுடன் உலாவுகின்றவர்களும், தவமும் சத்தியமும் உடையவர்களும் ஆகிய வாலகில்யர்கள் உண்டானுர்கள்.

தரன், துருவன், ஸோமன், அஹஸ், நலன், அநிலன், பிரத்யூஷன், பிரபாசன், என்பவர் எட்டு வசுக்கள்.

பிரபாசனுடைய புதல்வர் விச்வ கர்மா.

விச்வகர்மாவின் மகள் உஷாதேவி சூரியனே மணந்தாள். உஷாதேவியின் புதல்வர்கள்யமனும்அச்வினிதேவர்களும்.உஷாதேவி தன் சாயையை ஒரு பெண்ணுகச் செய்தாள். அந்தச் சாயாதேவியிடம் சனி பிறந்தான்.

பிருகுவின் புதல்வர் சியவனர். இவருடைய மனேவி மனுவின் மகள் ஆருஷி. இவருடைய தொடையிலிருந்து பிறந்தவர் ஔரவர். இவருடைய பிள்ளே ரிசீகர். ரிசீகருடைய புதல்வர் சமதக்கினி. சமதக்கினியின் புதல்வர் பரசுராமர்.

மன்னவரே! பூமியின் பாரத்தை நீக்க நாராயணரே கண்ணபிரானுக வந்து அவதரித்தார். இரணியன் சிசுபாலனுகவும், விப்ரசித்தி சராசந்தனுகவும் பிறந்தார்கள். காலநேமி என்பவன் கம்சனுகப் பிறந்தான். வியாழன் துரோணராகப் பிறந்தார். துவாபரயுகமே சகுனியாகப் பிறந்தது. கலிபுருஷன் துரியோதனனுகப் பிறந்தான்.பிராசன் என்றவசு பீஷ்மராகவும், தருமதேவதை விதுரராகவும் பிறந்தார்கள். அக்கினி அபிமன்யுவாகப் பிறந்தான்.

யயாதி : ஜனமேஜயரே! இனி உங்கள் குல முறையைக் கூறுவேன். உங்கள் குலம் சந்திரகுலம் அல்லவா? சந்திரன் அமுதத்துடன் வந்தவன். முதிர்ந்த கிரணங்களால் உலகங்களேக் குளிர வைப்பான். இத்தகைய சந்திர பகவான் தாரை என் பவளிடம் புதன் என்ற சிறந்த மைந்

† கின்னரர் — குதிரை முகமும் மனித உடம்பும் உடையவர்கள்.

‡ கிம்புருடர் — மனித முகமும் குதிரை உடம்பும் உடையவர்கள்.

தனைத் தந்தான். புதன் தவஞ் செய்து ஒன்பது கோள்களில் ஒருவனாக ஆனான்.

சூரியகுலத்து மன்னன் இளன் என்பவன் வேட்டையாடிய போது, அம்பிகை தவஞ் செய்த காட்டிற்குச் சென்றான். அவ்வனத்தில் யார் சென்றாலும் பெண்ணாகுமாறு பார்வதியின் சாபம். அதனால் இளன் என்ற வேந்தன், பெண்ணாகி இளையென்று ஆக, அந்த இளை என்பாளைப் புதபகவான் மருவ, அவள் புரூரவனை ஈன்றாள்.

புரூரவன் பெரிய வலிமையுடையவனாகி இந்திரனுக்கு உதவி செய்து, அரக்கர் கூட்டத்தை அழித்தான். அதனால் இந்திரன் மகிழ்ந்து அவனுக்கு ஊர்வசியைத் தந்தான். புரூரவனுக்கு ஊர்வசியிடம் ஆயு, தீமான், அமாவசு, திருடாயு, வஞயு, சதாயு என்ற ஆறு புதல்வர்கள் பிறந்தார்கள்.

நகுஷன் சிறப்பாக அரசுபுரிந்தான். நூறு அசுவமேதயாகம் புரிந்தான். அதனால் இந்திரபதம் பெற்றான். அவன் சசியை விரும்பி; ஏழு முனிவர்கள் பல்லக்கு எடுக்கச் சென்றான். அப்போது அவன் "சர்ப்ப" "சாப்ப" (சீக்கிரம்) என்றான். முனிவர்கள் 'சர்ப்பம் ஆகுக' என்று சபித்தார்கள். அதனால் அவன் மலைப்பாம்பாக விழுந்தான். இந்த நகுஷனுக்கு யதி, யயாதி, சம்யாதி, ஆயாதி, அயதி துருவன் என்ற ஆறு புதல்வர்கள்; மூத்தவனாகிய யதி யோகஞ் செய்து முத்தி பெற்றான்.

யயாதி பூவுலகம் முழுவதும் தனிச் செங்கோல் செலுத்தி அரசு புரிந்தான். இந்திரனைப் போல் விளங்கினான். அவனுடைய ஆட்சியில் நாட்டில் அறந்தழைத்து ஓங்கியது. அக்காலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் அடிக்கடி போர் நடந்தது. போரில் அசுரர்கள் மாண்டால், அசுர குருவாகிய சுக்கிரர் "சஞ்சீவினி" என்ற மந்திரத்தால் எழுப்பிவிடுவார். அந்த மந்திரம் தேவகுருவாகிய வியாழனுக்குத் தெரியாது. அதனால் மாண்ட தேவர்களை அவரால் எழுப்ப முடியவில்லை. இதனால் அசுரருக்கு வெற்றியுண்டாகிறது.

தேவர்கள் மனம் வருந்தி, வியாழனுடைய மைந்தனாகிய கசன் என்பவனை அழைத்து, "கசனே! நீ விருஷபர்வா என்ற அசுர மன்னனிடம் வாழ்கின்ற சுக்கிராச்சாரியரை அடுத்து அவருக்குச் சீடனாகி, பல பணிவிடைகளைப் புரிந்து, எப்படியாவது அந்த சஞ்சீவினி மந்திரத்தைக் கற்றுக்கொண்டு வருக. நீதான் இந்த உதவி செய்யவேண்டும். எங்கள் எல்லோருடைய அன்புக்கும் நீ உரியவனாக ஆவாய். யாகபாகம் உனக்கும் கிடைக்கும். சுக்கிரருடைய மகள் தேவயானியையும் நீ மகிழ வைக்க வேண்டும். அவளுடைய அன்பும் ஆதரவும் இருந்தால்தான், நீ இந்த வித்தையை யடைய முடியும். போய்வா" என்று விடை கொடுத்து அனுப்பினார்கள்.

கசன் விருஷ பர்வாவினுடைய நகரில், சுக்கிரரைக் கண்டு வணங்கி "குரு நாதா! நான் வியாழ பகவானுடைய மைந்தன். என்பேர் கசன். தங்களிடம் பணிவிடை செய்து கலை கற்க விரும்பி வந்துள்ளேன். ஆயிரம் ஆண்டுகள் பிரம்மசரிய விரதத்துடன் இருந்து தங்கட்கு ஊழியஞ் செய்வேன்" என்றான்.

சுக்கிரர், "கசனே! உனக்கு நல்வரவு: வித்தையை விரும்பி வந்த உன்னை நான் சீடனாக ஏற்றுக்கொண்டேன். என்பால் இருந்து வித்தையைக் கற்றுக்கொள்" என்றார். அது முதல் கசன் அவருக்கு வேண்டிய தொண்டுகளைப் புரிந்து வந்தான். யௌவன வயதை யடைந்த தேவயானி, கசனிடம் மிகுந்த பற்று வைத்து, அவனுக்கு வேண்டிய உணவுகளைத் தந்து உபசரித்தாள். கசன் அவளுக்கு மலர்களும் பழங்களும் தந்து, ஆடியும் பாடியும் ஏவல் செய்தும் அவளை மகிழ்வித்தான்.

பிரம்மசரிய விரதத்துடன் ஒழுகும் கசன், சுக்கிரரிடமிருந்து சஞ்சீவினி வித்தையைக் கற்றுக் கொண்டுவிடுவான் என்று கருதினார்கள் அசுரர்கள். தேவ குருவின்பால் உள்ள பகைமை காரணமாக அசுரர்கள் காட்டில் பசுக்களை மேய்த்துக் கொண்டிருந்த கசனைக் கொன்று, சிறு சிறு துண்டுகளாக்கி நாய்களுக்கு இட்டார்கள். பசுக்கள் தாமே தொழுவத்துக்கு வந்தன. தன் தோழனாகிய கசன் வராமையால் மனம்

வருந்திய தேவயானி, தந்தையே! கசன் இன்னும் வராமையால் அவர் இறந்திருக்க வேண்டும். அவர் இன்றி நான் உயிர் வாழேன்'' என்றாள். சுக்கிரர் அமிர்த சஞ்சீவினி மந்திரத்தை உச்சரித்தார். நாய் களின் உடம்புகளைப் பிளந்து கொண்டு, உயிர் பெற்றுக் கசன் மீண்டு வந்து சுக்கிரரைத் தொழுதான். அவனைக் கண்டு தேவயானி பெருமகிழ்ச்சியுற்றாள். "அன்பே! ஏன் தாமதம்? என்ன நடந்தது? என்று கேட்டாள்.

"பெண்ணரசி! நான் சமித்து, தர்ப்பை, விறகு இவைகளை எடுத்துக் கொண்டு, மிகுந்த சுமையினால் களைப்புற்று ஒரு ஆல மரத்து நிழலையடைந்தேன். பசுக்களும் நிழலில் ஒதுங்கின. அசுரர்கள் என்னைக் கண்டு "நீ யார்"? என்று கேட்டார்கள். "நான் தேவ குருவின் மகன்" என்றேன். உடனே அரக்கர்கள் நீண்ட வாளால் என்னை வெட்டினார்கள். பிறகு நான் நாய் உடம்பிலிருந்து வெளிவந்தேன். உன் பிதாவின் மந்திர சக்தியால் பிழைத்தேன்'' என்றான்.

ஒரு நாள் கசனை மலர் கொணருமாறு தேவயானி ஏவினாள். கானகஞ் சென்ற கசனை அசுரர் கண்டு சீறி, அவனைக் கொன்று இரத்தக் கடலில் கரைத்துவிட் டார்கள். பொழுது சென்றும் அவன் வராமையால், தேவயானி தன் தந்தை யிடம் வேண்டினாள். சுக்கிரர் மந்திரத் தைக் கூறினார். கசன் பிழைத்துவந்து நிகழ்ந்ததைத் தெரிவித்தான்.

மற்றும் ஒரு நாள் கசனைக் கானகத் திலே கண்ட அசுரர்கள் தீய எண்ணத் துடன் அவனை வெட்டிக் கொளுத்திச் சாம்பார் ஆக்கினார்கள். அச்சாம்பாரை மதுவுடன் கலந்து சுக்கிரருக்குத் தந்தார் கள். அவர் அதனை அறியாமல் குடித்து விட்டார்.

தேவயானி, "அப்பா! கசன் வரவில்லை; மாடுகள், மட்டும் வந்தன. அவர் கொல் லப்பட்டார் போலும்; அவர் இல்லாமல் என் உயிர் நில்லாது'' என்று கூறி அழுதாள். மதுவால் சிறிது மயங்கிய சுக்கிரர், கசன் தன் வயிற்றுக்குள் இருப்பதை யறியாமல், வெளியே இருப்பதாக நினைத்தார். "அம் மா, அழாதே! நான் பல முறை அவனை மந்திரத்தால் பிழைப்பித்தும் அவனை அசு ரர்கள் கொன்றுவிடுகின்றார்கள். இந்தி ராதி இமையவர்களும் உலக முழுவதும் உன் பெருமையைக் குறித்து உன்னை வணங்குகின்றார்கள். நீ கசனைக் குறித்து ஏன் சதா துன்பப்படுகின்றாய். அவனைப் பிழைப்பித்தால், மறுபடியும் கொல்லப்படு வான்; ஆதலால் அவனைப் பற்றி நீ கவலைப்படாதே'' என்றார்.

தேவயானி கண்ணீர் சிந்திய வண்ணம் நின்று "அப்பா! உத்தம குணங்கட்கெல் லாம் உறைவிடமான கசனை நான் மறக்க முடியுமா? அவர் என் உயிர் போன்றவர். அவர் பிழைக்கவில்லையானால் நான் தண் ணீர் கூடப் பருக மாட்டேன்'' என்றாள்.

அசுரகுரு, உடனே மந்திரத்தை உச் சரித்துவிட்டார். கசன் சுக்கிரர் வயிற்றுக் குள் உருப்பெற்றான்; வயிற்றுக்குள் இருந்த படியே "குருநாத! தங்கள் குமாரனாகிய என்னை அருள் புரிவீர்'' என்றான். சுக்கிரர் திடுக்கிட்டுப்போனார். சினமும் அடைந் தார். 'இது கொடிய அரக்கர்களின் செயல் போலும். இப்பாவிகளை அழித்து விட்டு நான் தேவர்களிடம் போவேன்' என்று எண்ணினார். "கசனே! நீ எப்படி என் வயிற்றையடைந்தாய்?'' என்றார்.

கசன் "கருணைக்கடலே! அரக்கர்கள் என்னை வெட்டிக் கட்டிக் கள்ளில் கரைத்து உங்கட்கு அளித்தார்கள்'' என்றான். சுக் கிரர் "குழந்தாய்! என் புதல்வியே! நான் இறந்தால்தான் கசன் பிழைப்பான். உனக்கு நான் வேண்டுமா? கசன் வேண்டுமா?'' என்று கேட்டார். "அப்பா! எனக்கு இருவரும் வேண் டும்'' என்றாள்.

சுக்கிரர் "என் வயிற்றுக்குள் இருக் கின்ற மாணவனே! அரக்கர்களின் கொடுமை அவருக்கே தீமை விளைவித்தது.

நீயும் தேவயானியிடம் பற்று வைத்தனை; அவளும் உன்னிடம் பற்று வைத்தாள் : கசன் என்ற வேடத்துடன் வந்த நீ, இந்திரனாக இராமல் இருந்தால், இந்த சஞ்சீவினி வித்தையைப் பெற்றுக்கொள். என் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்து, நான் உபதேசித்த மந்திரத்தால் என்னைப் பிழைக்கச் செய்வாய்'' என்று கூறி, மந்திர உபதேசஞ் செய்தார். உடனே கசன் அவருடைய வயிற்றைப் பிளந்து கொண்டு வந்தான். சுக்கிரர் மாண்டார். அவன் அம் மந்திர சக்தியால் அவரை உய்வித்தான். அவர் பாத மலர் மீது பணிந்து துதி செய்தான்.

சுக்கிரர் ''இங்நிகழ்ச்சிக்குக் காரணம் மதுபானமேயாகும். இன்று முதல் யாரும் மதுவை யருந்துதல் கூடாது. மதுவை யருந்தினேன் நரகமடையக் கடவது'' என்று ஒரு அறத்தை நிறுவினர். 'மூடர்களான அசுரர்களே! உங்கள் வஞ்சனைச் செயல் உங்களுக்குத் தீமையை விளைவித்தது. உங்களால்தான் கசனுக்கு மந்திர வித்தை கிடைத்தது. நீங்கள் இனி இவனுக்குக் கெடுதல் செய்யக் கூடாது'' என்று கட்டளை யிட்டார். கசன் மீளவும் ஐந்நூறு ஆண்டுகள் தொண்டு செய்து நிறைவு பெற்று, விண்ணுலகம் போக அவரிடம் விடை பெற்றுப் புறப்பட்டான்.

தேவயானி கசனைப் பார்த்து ''அன்புள்ளவரே! நீர் என்னை விட்டுச் செல்லுவது தகாது. நான் உம்மை அளவற்ற அன்புடன் நேசித்தேன். நீர் பிரம்மசரிய விரதத்தில் இருந்ததனால், விவாகத்துக்காகக் காத்திருந்தேன். ஒழுக்கம் கல்வி தவம் அழகு இவைகளில் உயர்ந்த நீர் முறைப்படி என்னை மணஞ் செய்து கொள்ளும்'' என்ருள்.

கசன் ''அம்மா! நீ எனக்கு வணங்கத் தக்கவள். குருபுத்திரி. ஆதலால் நீ இப்படி கூறுவது பொருந்தாது. என்னை மன்னிப்பாய்.நான் உனக்குச் சகோதரன்'' என்ருன்.

தேவயானி ''உத்தமரே! நீர் வியாழ பகவானுடைய புதல்வர். நீர் என் சகோதரர் என்பது எப்படி பொருந்தும்? நீர் அசுரர்களால் கொல்லப்பட்ட காலங்களில் அன்பினுல் நான் உம்மைப் பிழைக்குமாறு செய்தேன். உம்மை அந்தரங்கத்தில் காதலித்தேன். என் காதல் வீணுகக் கூடாது. என்னை ஏற்றுக் கொள்ளும்'' என்ருள்.

கசன், ''இனியவளே! சுக்கிரருடைய வயிற்றில் நீ வசித்ததுபோல், நானும் அதே வயிற்றில் வசித்து வந்தேன். அவர் எனக்குக் குரு, ஞான பிதா! இதனுல் எனக்குச் சுக்கிரர் தந்தை. நீ சகோதரியாகின்ருய். தரும விரோதமாக நான் உன்னை விரும்பேன். எனக்கு விடை கொடு. வழியில் எனக்கு நன்மை விளையுமாறு வேண்டிக்கொள்'' என்ருன்.

தேவயானி ''கசனே! சஞ்சீவினி வித்தை உனக்குப் பயனில்லாமல்போக'' என்று கூறிச் சபித்தாள்.அதற்குக் கசன்,''அம்மா! உன்னை நான் வணங்குகின்றேன். வீணுக என்னைச் சபித்தாய். வித்தை எனக்குப் பயன் பெருது எனினும் என்பால் கற்றவனுக்குப் பயன் படுந்தானே! உன்னை அந்தணன் மணஞ்செய்துகொள்ளமாட்டான்'' என்று கூறிவிட்டுச் சுவர்க்கஞ் சென்ருன்.

தேவர்கள் அவனை வரவேற்று ''கசனே! உன்புகழ் அழியாது. நீ வேள்வியில் எங்களுடன் பாகம் பெறுவாய்'' என்ருர்கள். அந்த மந்திரத்தைத் தேவர்கள் கற்றுக் கொண்டு பயன்பெற்ருர்கள். ''இந்திரனே! இனி பகைவரை அழிப்பாய்'' என்ருர்கள். இந்திரன் புறப்பட்டு வந்தான்.

(தொடரும்)





தமிழ்நாடு தெய்வீகப் பேரவை நிர்வாகக் குழுக் கூட்ட நிகழ்ச்சியிற்
கலந்துகொண்ட பெருமக்கள்





தமிழ்நாடு தெய்வீகப் பேரவை நிர்வாகக் குழுக் கூட்ட நிகழ்ச்சியிற்
கலந்துகொண்ட பெருமக்கள்

# சமய இலக்கியம்

அருட்டிரு. அழகர் அடிகள் அவர்கள்
[திருக்குறள் பீடம், மாம்பாக்கம் குருகுலம், மதுராந்தகம்]

**சமய உணர்வு :**

சமயம் என்பது, ஒரு செம்மையான தகுதியைக் குறிக்கும்; செம்மை, தலைமைப் பாட்டுக்கும் நன்மைக்கும் உரியது. சமய நிலை தவிர, மற்றவை அப்பெரிய நிலைக்கு எட்டும் வாய்ப்பில் இல்லை என்பது, அச்சொல் கொண்டே தெளிந்து கொள்ளலாம். காரணம், சமய உண்மைகளை எண்ணினால், விளங்கி விடும். இரண்டொன்று கருதலாம்.

**உண்மைத் திறன் :**

சமய உணர்வை, 'மெய்யுணர்வு' என்றுங் கூறுவதுண்டு; மெய்யைப் பற்றிய உணர்வு என்பது அதன் பொருள்; மெய்ம்மை என்பது ஒரு பண்பு; பண்புக்கு அதனையுடைய ஒரு பொருள் வேண்டும். குணி இல்லாமல் குணம் இல்லை. அந்தப் பொருளைச் சார்ந்து பழகித்தான், அதன் இயல்பாகிய மெய்யுணர்வை யாரும் அடைய முடியும்.

சமயம் இப்படி உண்மையைத் தேடுகிறது. அப்படியானால் மற்றவை, பொய்யைத் தேடுகின்றன என்றுவது ஒரு முடிபுக்கு வரவேண்டும்; அல்லது அரைகுறையாக மெய்யைத் தேடுகின்றன என்றுவது துணிந்தே தீரவேண்டும்.

மக்களின் உணர்ச்சி கிளர்ச்சிகளை, ஆற்றலை, உண்மைக்குத் திருப்புகிறது சமயம்; பல துறைத் தலைவர்களுக்கும் தொண்டர்களுக்கும், 'உண்மையை நினையுங்கள், உண்மையைப் பேசுங்கள், உண்மையைச் செய்யுங்கள்' என்றுதான் அறிவுறுத்துகிறது சமயம்.

மெய்ம்மையாம் உழவைச் செய்து
விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப்
பொறைஎனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையுள் நோக்கிக் கண்டு
தகவெனும் வேலி இட்டுச்
செம்மையுள் நிற்பர் ஆகில்
சிவகதி விளையும் அன்றே.

என்பது அப்பர் திருமொழி.

**வல்லமைப்பாடு :**

அந்த மெய்யுணர்வின் இயல்பை, அருளுணர்வு என்றும் சொல்வதுண்டு. அதன் கருத்து, பிறர்க்கென வாழ்தல்; அருள் என்னும் சொல்லுக்கு வல்லமை என்று பெரியோர்கள் பொருள் செய்திருக்கின்றனர். 'அருள் அது சத்தி' என்பர் அருள் நந்திசிவம்.

பிறர்க்கென வாழ்தலால் யார்க்கும் வாழ்க்கை ஆற்றல் கொள்கிறது. உடம்பிலும் ஆற்றல், உள்ளத்திலும் ஆற்றல், உயிரிலும் ஆற்றல். அன்பும் அருளும் அறனும் இங்ஙனம் பேராற்றல் பயப்பதனாலேயேதான், பொன்னும் பொருளும் போகமுமே பொருளென்று எண்ணாமல், அன்பும் அருளும் அறனும் விரும்பியது பரிபாடல்.

இவ்வாறு ஆற்றலான வாழ்க்கையை உருவாக்குவது சமயம்! ஒரு காலத்தில் வறுமை தாண்டவமாடிய திருவீழிமிழலை என்னும் ஊருக்கு அருகிற்செல்ல நேர்ந்தபோது, அப்பரும் சம்பந்தரும், கோழைகளாகி வேற்றூர்க்கு ஓடிவிடவில்லை. வறுமை தீரும் வரையில், அது தீர்க்கும் வீரராய் அவ்வூரிலேயே தங்கியிருந்தனர். பிறர்

துயர் தீர்க்கும் ஆற்றலும் அருளுமே, சமயப் பண்பாகும்.

### இருமைக்கும் துணை :

இச் சமயப் பண்புகள் உடனுக்குடன் உதவுவன என்பதையும் கவனித்துக் கொள்ளவேண்டும். சமயம் ஒழுக்கம் மறுமைக்குத்தான் பயன் செய்வது என்னும் கருத்துச் சரியான கணிப்பாகாது. 'அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவு இல்லை'தான். ஆனல், 'இம்மையே தரும் சோறும் கூறையும், ஏத்தல் ஆம், இடர் கெடலும் ஆம்' என்பதை முதலில் முதன்மையாய்க் கவனித்துத் தான் கூறியிருக்கிறார் சுந்தரர்! செடியின் நோக்கம், முடிவாகப் பழம் பயப்பதேயாயினும், அதற்கு முன்பிருந்தே அது வேரும் தண்டும் கொழுந்தும் பூவும் பிஞ்சும் காயும், அவ்வப்போதும் உதவிவந்ததை யார் மறக்க முடியும்!

மற்றவையெல்லாம் இம்மைக்கு மட்டும் அப்படிப் பயன்தரும் என்றால், சமயம் இருமைக்கும் பயன்தரும் நிறைவுடையது என்பதே இங்கே கருதத்தக்கது. எதைப் பயன்படுத்தினலும் சரியாகப் பயன்படுத்தினல் நலம் உண்டாகும்; சமய ஒழுக்கம் சரியாகக் கடைப்பிடிக்கப்பட்டால், காலந்தோறும் தானே தக்க பயன்விளைத்தல் உறுதி.

### இயற்கைப் பாடம் :

இயற்கைதான் நமக்கு எல்லாப் பாடங்களையும் கற்றுக் கொடுக்கிறது. சமயப் பாடத்தையும் நமக்கு அதுதான் கற்றுக் கொடுத்திருக்கிறது. ஓர் இயற்கைப் பொருளை எடுத்துக்கொள்வோம். ஒரு வாழை மரம்; இது உயிரோடு கூடியது; அதனல் இதை எண்ணிப் பார்க்கலாம். இந்த மரம், நமக்கு ஒரு பாடம் கற்றுக் கொடுக்கிறது.

வாழை மரம் என்பது ஒரு பொருள். பொருளாக எதையும் பார்ப்பதைத்தான் 'பொருட்பால்'. என்றார் திருவள்ளுவர்.

பசுமை நிறத்துடன் பெரிய இலைகளை விரித்து, மிக அழகாக நீல மயில்போல விளங்குகிறது வாழை. ஒரு பொருளென்று இருந்தால் இப்படி ஓர் அழகும் வேண்டும் போல் இருக்கிறது. இந்தக் கவர்ச்சியைத் தான் 'கலைப் பால்' அல்லது 'இன்பப்பால்' என்று எடுத்துக்கொண்டார் பொய்யா மொழியார்.

மேலும், அந்த வாழையின் வளர்ச்சியை அதாவது நடத்தையை நோக்கினல், எல்லாம் ஓர் ஒழுங்கு முறையில் காணப்படுகின்றன. பட்டைகளெல்லாம் அடுக்கடுக்காய், இலைகளெல்லாம் முறைமுறையாய், காய்களெல்லாம் வரிசைவரிசையாய் முறையோடு அமைந்திருக்கின்றன; ஏதோ ஓர் அறமுறையோடு நடந்து வருவதுபோல் தெரிகிறது. இந்தத் திறத்தைத்தான் 'அறத்துப்பால்' என்றார், தெய்வப் புலவர்.

மற்றோர் உயர்ந்த மறைபொருளும் வாழையின் பண்பிலிருந்து நமக்கு வெளிப்படுகிறது. ஆனல் அது குறிப்பாய்த் தெரிகிறது. முன்னே கூறிய பொருளும் இன்பமும் அறமும், அவற்றைக் காட்டுகின்ற இவ்வாழை மரமும், அதன் அழகும் ஒழுங்கும்போலப் புலன்களாற் கண்டுகொள்ளும்படி, வெளிப்படையாகத் தெரியவில்லை. பொருட் பகுதியும், கலைக்கூறும், ஒழுங்குத் திறனுமாய், வாழைவளர்ந்து வாழ்ந்ததையெல்லாம் ஊன்றிக் கவனித்தால், முடிவில் குலையையும் மற்றவர்கள் பயன்படுத்திக் கொள்ள ஈன்றுவிட்டு, தான் மறைந்து விடுதலை அறியலாம். உள்ள காலமெல்லாம் உலகுக்குப் பட்டையும் இலையும் நாரும் பிறவும் உதவிக்கொண்டே வந்து குலையும் காயும் கனியும் என்னும் பெரும் பயனும் ஈந்து, தண்டும் வேருமாகத் தன்னையேகூடப் பிறர்க்குத் தந்துவிடும் அதன் பண்பை என்னவென்பது!

### வாழை வாழ்கிறது :

பிறர்க்கென வாழும் இல்லறத்தான் போல் விருந்தோம்பலாய் வாழ்ந்து, முடிந்த குறிக்கோளும் பிறர்க்குதவுதலே என்று பற்றற்ற துறவறமுங் காத்து, தன் கன்றுக்கென்றுகூடத் தன்னில் எதையும் தன் குலையையும் வைக்காத விடுதலை வீரம் சிறந்து, பிறர்க்கெனவே முற்றும் வாழும் உரிமைப் பெருமையில் வாழை எவ்வளவு ஓங்கிவிட்டது! வாழையின்குலை வாழைக்கு ஏதும் பயன்படுதில்லை; குலை ஈனும் வரையிலேயே வாழை வாழ்கிறது ; அப்படியானல் வாழையின் வாழ்க்கைக் குறிக்கோளெல்லாம், பிறர்க்குக் குலை உதவவேண்டும் என்பதே என்று தெரிகிறது. பிறர்க்கென வாழ்தலே, தன் பற்று இன்றி வாழ்தலே, வாழ்வு என்று வாழை நிறுவுகிறது. வாழ் என்னும் முதனிலையால் வாழை என்று அது பெயர் பெற்றதுபோல, ஆறறிவிற் சிறந்த மக்களும் பெயர் பெற

வில்லையே! வாழ்வது வாழைதான் போலும்.

இத்தகைய பற்றற்ற வீர விடுதலை வாழ்க்கையைத்தான், 'வீட்டுப்பால்' என்று சிறப்பித்தார் திருக்குறட் குரவர். முப்பாலில் நாற்பாலும் விளக்கும் திருக்குறளைப் போல, ஒரு திருக்குறள் மறையாக அன்றோ வாழை விளங்குகிறது.

## நான்மறைப் பொருள் :

இங்ஙனம், பொருளும் இன்பமும் அறமும் வீடும் என்னும் நாற்கூற்றுண்மைகளை ஒவ்வோர் இயற்கைப் பொருளிலும் காணலாம்; ஒவ்வொன்றில் ஒவ்வோர் அளவிலாவது இந் நான்கும் காணலாம். வீடுபேற்றுண்மை இயற்கையில் வெளிப்படையாகத் தெரிவதில்லை ; ஆயினும் மறைபொருளாக உள்ளன. எல்லாம் இயற்கைப் பாடம் தான்.

நான்கு கூறுமாய் மறைந்த பொருளுமாய் அமைந்து, எல்லாவற்றிலும் இயங்கி வரும் இவ்வுண்மைகளே, நம் முன்னோரால் ஆழ்ந்து கவனித்துக் கண்டுபிடிக்கப் பட்டு, நான்மறைகள் எனப்பட்டன. நான் மறைகள் என்பவை நான்கு தனி நூல்கள் அல்ல.

நூல்களால் விளக்கப் படும்போது, வாழ்க்கை நடத்தைகள் பொருளும் இன்பமும் அறமுமாக முப்பாலாய் அமைய, வீடு என்பது வாழ்க்கையின் குறிக்கோளாய் நிற்றலின், வாழுங் காலத்தில் அது குறிப்பாகவே அடங்கிக் கிடக்கின்றது; வாழ்வாங்கு வாழ்வார்க்கு அது வெளிப்படும். வாழ்க்கை இங்ஙனம் நாற்பகுதிக் குரியதாயினும், அவற்றில் முதல் மூன்று பகுதிகளே வெளிப்படைக் குரியன. அதனாலேதான், தமிழை மறை முப்பாலாய் நின்று, நாற்பால்விளக்கும் முப்பால் அல்லது முத்தமிழ் நான்மறையாய்த் திகழ்கின்றது.

நூல் அல்லது இலக்கியம் என்பதில், இம் முப்பால்தான் முதற் சமய இலக்கியம். அதாவது, வாழ்க்கை யிலக்கியம்! இது உலகப் பொதுவேத இலக்கிய மாகவும், பழமை பெருமைகளுடன் சிறந்துள்ளது!

## நிறைவாழ்வு :

நிறைவான பெருவாழ்வு, இதனற் சமய வாழ்வே எனத் தெரிந்துகொள்ளப்படும். மற்றைய பொருள் வாழ்வோ, கலை வாழ்வோ, அற வாழ்வோ அல்லது இம் மூன்று வாழ்வுமேகூட, நிறைவாழ்வாகாது என்பதும் துணிந்துகொள்ளப்படும். பிறர்க்கெனவே வாழ்கின்ற, பற்றற்ற விடுதலையான வீரவீட்டு வாழ்வும், வாழ்க்கையில் மணங் கமழும்போதுதான் அது நிறைவாழ்வாகும். அதாவது, சான்ருண்மையாகும்.

'சீவன் முத்தி' என்று பிற்காலப் பெரியோர் சொல்வது, இச்சான்ருண்மையைத்தான், வாழ்வின் நோக்கம் என்பது. இவ் வீடுபேற்று நிலையாகிய நிறைவாழ்வே என்று தெளிவிப்பதற்காகத்தான் "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச் சான்ருேன் எனக் கேட்ட தாய்" என்று திருக்குறளிலும் இது வந்தது.

## உயர்ந்த இலக்கியம் :

'இலக்கியம்' என்னும் சொல்லுக்குக் 'குறிக்கோள் வாழ்க்கையின் வடிப்பு' என் பதுபொருள். நிறை வாழ்வின் இயல்பாகிய வீடுபேற்றைக் குறிக்கோளாகக் கொள்ளாத, புல்லிய பொருளின்ப வாழ்க்கையின் வடிப்புக்கள் எவ்வளவுதான் சிறப்பாக அமைந்தாலும், அவையெல்லாம் எப்படி தலைசிறந்த இலக்கியங்களாகும் என்பதை, அன்பர்கள் கருதிப்பார்ப்பது முக்கியம். சமய ஒழுக்கங்களிள் வடிப்பாகிய சமய இலக்கியமே, இலக்கியங்களுள் உயர்ந்த தலைமைப்பாடுடையன என்று, கருத்திற் பதித்துக்கொள்ள வேண்டும்.

## இருவகை இலக்கியம் :

குறிக்கோள் வாழ்க்கையைப் பின்பற்றுவதிலும் இரண்டுவகை உண்டு; ஒன்று தன் குறிக்கோளை நிறைவேற்றுதல் ; மற்ருென்று தலைவன் குறிக்கோளை நிறைவேற்றுதல். வீடுபேறேயாயினும் அதனைத் தான் அடைதல் என்பதில், தன்னலமும் தற்குறிப்பும் தன்முனைப்பும் தலையெடுக்கும். தலைவனின் குறிக்கோள் நிறைவேற உழைப்பதிலேதான், முற்றிலும் பற்றுவிட்ட சரியான வீடுபேறு உள்ளது; "யான்கண் டனையர் என் இளையரும்" என்னும் சங்ககால வாழ்க்கைத் திறனும், "என் கடன் பணி செய்துகிடப்பதே" என்னும் பிற்காலக்கடமை வாழ்வும், இவ் வூற்றம் அமைந்தவை.

'இலக்கியம்' என்னும் குறிக்கோள் வாழ்க்கை நூல்களில், தன் குறிக்கோள்

நிறைவேற்று வாழ்க்கையே வெளிப்படையாய் வீறித் தெரிவனவே பெரும்பாலானவை. அவையே இப்போது எண்சுவை இலக்கியங்களாய் விளங்குகின்றன; தலைவனின் குறிக்கோளன்றித் தன்குறிக்கோள் அற்ற பெருவாழ்வின் வடிப்பு 'மறை இலக்கியம்' என்று தனியே கொள்ளப்பட்டது. இதனில் எண்வகைச் சுவையோடு, சமநிலைச்சுவை என்னும் மற்றொரு நற்சுவையும் பெரிதோங்கித் திகழும். இலக்கியங்களுக்கும் மறைகளுக்கும் இது வேறுபாடு. திருக்குறள் அதனாலேதான் 'மறை' எனப்பட்டது.

**சமய வாழ்வு:**

சங்க இலக்கியங்களையும் இலக்கணங்களையும் இயற்றியவரைச் சங்கச் சான்றோர் என்று போற்றும் வழக்கிருக்கிறது; இவர் பலரும் நிறைவாழ்வு பெற்றவரே. பிசிராந்தையார் வாழ்க்கையும், அவர் தொடர்புடையார் வாழ்க்கையுமே இதற்குச் சான்று; அவர் பலரும் பொய்யா வாழ்க்கையர்; மெய்யுணர்வினர்.

அக்காலத்தில் வாழ்க்கை வேறு, சமய வாழ்க்கை வேறு என்னும் வேற்றுமை இல்லை. சமய ஒழக்கம் வாழ்க்கை வடிவில், மிகச் சிறப்பாகப் பற்றின்றிப் பிறர்க்கென வாழ்தலாகவே அமைந்திருந்தது. அது தான் சரியான நாகரிக காலம்!

இல்லாவிட்டால், 'இருந்தோம்பி இல் வாழ்வதெல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு' 'தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற்பொருட்டு' 'அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும் சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே', 'இன்னா தம்ம இவ்வுலகம்இனிய காண்க இதன் இயல்புணர்ந்தோரே' 'பெரியரை வியத்தலும் இலமே, சிறியரை இகழ்தல் அதனினும் இலமே' என்றெல்லாம் வாக்குகள் எழுமா?

ஆதலின் உண்மையான தூய நல்ல சமய வாழ்வு, மீண்டும் சமுதாயத்தில் நல முற வாழ்வதற்கு இறையருளை வாழ்த்தி வணங்குவோம்.

---

## செய்திச் சுருக்கம்

**எதிர்கொள் விழா:** திருப்பூந்துருத்தியில் திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும் ஒருவரை ஒருவர் எதிர்கொண்டு சந்தித்த இடமான, தென்பிரம்பையிலுள்ள திருஞான சம்பந்தர்மேட்டில், அப்பர் எதிர்கொள்விழா, தஞ்சைக் கோட்ட ஆட்சித் தலைவர் திரு கருப்பண்ணன் எம்.ஏ., அவர்கள் தலைமையில், 30—6—68 அன்று சிறப்புற நடைபெற்றது. திருவாளர்கள் முருகையா தேசிகர், வித்வான் ஆபத்சகாயம், தவத்திரு மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள், தவத்திரு சுந்தரலிங்கத் தம்பிரான் சுவாமிகள், திரு எம். இராதாகிருஷ்ண காடேராவ் சாகிப், திரு ஜி. தனவேல் பிள்ளை, திரு. கே. செல்வமணி (இறைபணியாளர்) ஆகிய பெருமக்கள் கலந்துகொண்டனர்.

—ஆசிரியர்.

# முருகன் பெருமை

'சித்தாந்தக் கலைச்செல்வர்'
திரு. க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ., எல்., டி.

உலகில் உயர்ந்த பிறப்பெடுத்த மக்கள், அப்பிறப்பால் அடைவதற்குரிய சிறந்த பேறு, உலக முதற் பொருளாகிய இறைவனைத் தலைப்பட்டுணர்ந்து பேரின்பம் எய்துதலே ஆகும். இதனையே நக்கீரர் "செவ்வேற் சேஎய்-சேவடி படரும் செம்மல் உள்ளமொடு நலம்புரி கொள்கைப் புலம் பிரிந்து உறையும்–செலவு" எனவும், "பெறல் அரும் பரிசில்" எனவும் திருமுருகாற்றுப்படையில் குறித்தருளினர். ஏனைய உலக நலன்களும் இறைவழி பாட்டால் எய்தற்பாலனவே ஆம். "சிற்றம்பலம் மேய செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே" என்றருளிச் செய்த திருஞான சம்பந்தப்பிள்ளையார் திருவுள்ளக்கிடை இதுவே. உலகப் பொது மறை வகுத்தருளிய திருவள்ளுவனார்க்கும் கருத்து இதுவே என்பது, அவர் நூலால் உணரப்படும்.

இறைவனது உண்மையியல்பு, நம் மனமொழிகளைக் கடந்தது; ஆயினும், அவன் பேரருள் உடையவன். ஆதலின், அவன் தன்னை அன்பால் நினைந்து தொழுவார்க்கு, அவர்கள் காணவும் கருதவும், பொருள்சேர் புகழைச் சொல்லவும், தொழுது இன்புறவும் இயலும்படி எளிவந்து, வெளிப்பட்டருளிய வரலாறுகள் பலப்பல. அங்ஙனம் முதல்வன் வெளிப்பட்டருளப்பெற்ற பெருமக்கள், தாம் கண்ட திருக்கோலத்தையும், பெற்ற பேறுகளையும் கிளந்தோதிய வாய்மொழிகளே, 'பொருள் சேர் புகழ்' எனவும்; 'நிறை மொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி' எனவும்; திருமுறைகள் எனவும்; திருப்புகழ் எனவும் நம் தமிழகத்தே நிலவி வருகின்றன. அங்ஙனம் வெளிப்பட்டருளிய திருக்கோலங்களுள், திருமுருகன் திருவுருவங்களும் சேர்ந்தவை என்பது தெளிவு.

இவ்வடிப்படை உண்மையை "நானாவித உருவாய் நமை ஆள்வான்" எனத் திருஞானசம்பந்தரும், "ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றும் இல்லாற்கு ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணங் கொட்டாமோ" எனத் திருவாதவூர் அடிகளும் அருளிச் செய்தமை கொண்டு, நாம் சிந்தித்துத் தெளியலாம்.

முதற் பொருளின் உண்மையியல்பாகிய கடவுள்நிலை, மாற்றம் மனங்கழிய நின்றது. ஆயினும் எவ்வாற்றானும் உணரப்படாதது அன்று. "உரை உணர்வு இறந்து நின்று உணர்வதோர் உணர்வே" எனத் திருவாதவூர் அடிகள் கூறுகின்றார். ஆதலால் மருட்கையுணர்வு நீங்கி அவாவறுத்தார்க்கு முதற்பொருள், அருளொளி விளங்கும் பேரின்பவெளியாக அனுபவப்படுவதென்பதே மெய்யுணர்ந்தார் முடிவு. "அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்தது எது" என்பது தாயுமான அடிகள் திருவாய்மொழி. ஞானத்தால் தொழும் சிவஞானிகளுக்கு உணரவரும் போதஉருவ அருளொளியே பராசக்தி (மேலான ஆற்றல்) எனவும், மோனபரானந்தமே பரசிவம் (மேலான, தூய, மாறுதல் இல்லாத பேரின்பம்) எனவும், இருவகைப்படவைத்து உயர்ந்த நூல்களால் உணர்த்தப்படும்.

தூய இயற்கைப் பேருணர்வும், ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பமும் ஆகிய இவ்விரண்டும், ஒரே பொருளின் ஈரியல்புகளே ஆகும். அப்பொருள் தோற்றக் கேடுகள் இன்றித் தூய்தாய் என்றும் ஒருபடித்தாய் உள்ளது. இக்கருத்துப் பற்றி அதனைச் சத்து என உபநிடதங்கள் உரைக்கின்றன. தெய்வப்புலவர் திருவள்ளுவர் முதற்பொருளை, மெய்ப்பொருள்–உள்ளது - செம்பொருள் - வாய்மை என்னும் பெயர்களால் குறித்தருளுகின்றார்.

இத்தகைய முழுமுதற் பொருளின் இயல்பைப் பண்டைத் தமிழ்ச் சான்றோர், எல்லோருடைய மனத்தையும் கவரும் மாண்பும் இனிமையும் தூய்மையும் வாய்ந்த மலரோடு ஒப்பிட்டு, மகிழ்ந்து உளங்கொண்டனர். இதனைப் "பூவண்ணம் பூவின் மணம்போல மெய்ப்போத இன்பம் ஆவண்ணம் மெய்கொண்டவன்" என்னுந் திருவிளையாடற் புராணச் செய்யுளால் உணர்ந்தின் புறலாம். பூவின் பிழம்பும், அதன் வண்ணமும் போல, இறைவனும் இறைவியும் பிரிப்பின்றிக் கூடியுள்ளனர். பூ தன்னை அடைந்தார்க்கே இன்பந்தருவது; ஆயின் அதிலிருந்து முளைத்து விரிந்து பரவும் முருகு (மணம்), நாமிருக்கும் இடத்தில் வந்து இன்பு ஊட்டிப் பூவின் இருப்பையும், அதனை அடையும் வழியையும் நினைப்பித்து உணர்த்துவது. இங்ஙனம் பரம்பொருளினின்றும் முளைத்தெழுந்து, எத்துணையும் எளியோமாய்க் கீழே உள்ள நம் நிலைக்குத் தக்கபடி இறங்கிவந்து, அருள்புரியும் முதற்பொருளின் அதோமுக சத்தியே முருகு அல்லது முருகன் எனப்படும். (அதோமுகம்-கீழ்நோக்கிய முகம்).

திருமுருகன், எங்கும் சிவபிரானுடைய குமாரனாகவே கூறப்படுதல் உளங்கொளற்பாலது. பண்டைத் தமிழகத்தே "பிள்ளையார்" என்னுந் திருப்பெயர், குமாரக் கடவுளையே குறித்து வந்தது என்பதும் எண்ணி உணர்தற்கு உரியது.

'முருகு' என்னும் சொல், தெய்வத் தன்மை என்னும் பொருளைக் குறிக்கும் என்பர் நச்சினார்க்கினியர். பூவின்கண் அடங்கியிருந்து அது மலரும்போது வெளிப்பட்டு விரிந்து, அப்பூவினையும் தன் கண் அடங்கக் கொள்வது பூவின்மணம்; அதுபோல, உயிரின் கண்ணும் உலகத்துப் பொருள்களிலும் காணப்படாது அடங்கி நின்று, பின் அன்பின் முதிர்ச்சியால் வெளிப்படுவதே தெய்வத்தன்மை; இதனைப்"பூவினிற் கந்தம் பொருந்தியவாறு போல் சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது" என்னும் திருமந்திரத்தாலும், "உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர் எழுதரு நாற்றம்போல்—பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்" என்னும் திருவாசகத்தாலும் தெளிந்து கொள்ளலாம். எத்துணையும் அரியபெரிய சிவபிரான், எத்துணையும் எளிய கடைப்பட்ட உயிர்கள், உலக வாழ்வில் அழுந்தித் துன்புறுங் காலத்துத் தன்னை நினைப்பின், அவர் நினைந்த உருவில் விரைந்து சென்று இடுக்கண் தீர்த்து அருள்புரியும் கருணைத் திறமே, பண்டைத் தமிழ்ச் சான்றோர்களால் முருகு எனப்பட்டது என்பது, இதனால் இனிது விளங்கும்.

நக்கீரர் முருகப் பெருமானை இங்குக் கூறியபடி எண்ணியுள்ளார் என்பது, திருமுருகாற்றுப்படை வரலாற்றால் உணர்தல் கூடும். சிவபூசையில் நினைவு வேறு ஆனமைபற்றி, ஒரு பூதத்தால் மலைக்குகையில் அடைபட்டிருந்தபோது, நக்கீரர் பின் வருமாறு எண்ணினார் எனச் சீகாளத்திப் புராணம் கூறுகின்றது.

"வரையுணர் குறிஞ்சி மன்னன்
வரைபக எறிந்த செவ்வேள்
முருகலர் அலங்கல் திண்டோள்
முருகன்என் றவன்பொற் றண்டைத்
திருவடி மலர்இ றைஞ்சில்
தீவினைச் செல்லல் முற்றும்
பருதியங் கடவுட் கண்ட
பனியென அகன்று போமால்;"

"ஆறிரு தடந்தோள் அண்ணல்
ஆறெழுத் தினையும் ஓதில்
வேறொரு பிணிபோம் என்கை
வியப்பதோ பிறவி என்னும்
மாறரும் அநாதி நோயும்
மாறிவே தாக மங்கள்
கூறரும் இன்ப வீட்டிற்
குடிபுகுந் திருப்பர் அன்றே;"

"ஐம்பெரும் பூத வாயின்
அகப்படும் உயிரை மீட்டுச்
செம்பொனஞ் சிறுச தங்கைத்
திருவடி நிழலில் வைக்கும்
நம்பிநம் குமர வேட்கிங்
நாள்ஒரு சிறுபூ தத்தால்
இம்பரிங் குறுநோய் தீர்த்தல்
எளிதலால் அரிய தன்றே;"

"இன்னன நினைந்து கீரன்
இலங்கிலை நெடுவேற் செம்மல்
பன்னிரு செவியும் ஆரப்
பருகமு தாகி ஓதில்
உன்னிய உன்னி யாங்கிங்
குதவுவ தாகிப் பாவுள்
முன்னுற வந்து நிற்கும்
முருகாற்றுப் படைமொ ழிந்தான்."

—சிவப்பிரகாசர்.

நக்கீரர் பாண்டியன் நன்மாறனை "முருகு ஒத்தியே முன்னியது முடித்தலின்" எனக் கூறுதலின் முருகன், தன்னை வழிபடுவோர் தம் குறையை எடுத்துரைக்க மாட்டார் ஆயினும், அவர் கருத்தறிந்து குறைமுடிக் கும் தெய்வம் எனக் கருதிவந்தார் என்பது இதனால் விளங்குகின்றது.



அறநிலைய அமைச்சர் மாண்புமிகு நாவலர் இரா. நெடுஞ்செழியன் M.A., அவர்கள் திருவாரூர்த் தியாகராசப் பெருமான் திருக்கோயிலில் கட்டப்பெற இருக்கும் திருமண மண்டபத்துக்குக் கால்கோள் நிகழ்த்துதல்.

# ஸ்ரீராமாயண ரசப்பிரவாகம்

மகாவித்துவான். ஸ்ரீமத். பி.ப. அண்ணங்கராசாரிய சுவாமிகள்
(காஞ்சிபுரம்.)

வால்மீகி நாரத சம்வாதத்தில் 'சமர்த்தன் யார்' என்கிற பத்தாவது வினா விவரிக்கப் படுகிறது. 'வித்துவான் யார்?' என்கிற வினாவுக்கு அடுத்தபடியாக, 'சமர்த்தன் யார்?' என்கிற இவ்வினா தோன்றியுள்ளது. ஒருவன் வித்துவானாய் இருந்தால், அவன் சமர்த்தனாய் இருக்கத் தக்கவனே அன்றோ? அசமர்த்தனாய் இருப்பவன் வித்துவான் என்னத் தகுவனோ? தகமாட்டானே. ஆகவே தனித்தனி இந்த வினாக்கள் எதற்காகத் தோன்றின என்று ஆராயும் அளவில், வித்துவத் என்பது தனிப்பட்டது, சாமர்த்தியம் என்பது தனிப்பட்டது என்றும், வித்துவானாய் இருப்பவர்கள் யாவரும் சமர்த்தர்களாய் இருக்க மாட்டார்கள் என்றும், தெரிந்து கொள்ள இயலும். இதைப் பற்றி உலகியற் கதை ஒன்று நினைவுக்கு வருகின்றது. அதைத் தெரிவிக்கின்றோம் கேண்மின் :

நகைச்சுவைக் கதை ஒன்று :

மிகச்சிறந்த வித்துவான் ஒருவர், ஆசார்ய பீடம் வகிப்பவர், ஆஸ்தான வித்வான்கள் நால்வருடன் சிஷ்யயாத்திரைக்குப் புறப்பட்டார். கல்கத்தா மாநகரம் சென்று சேர்ந்து, அவ்வூரில் தம்முடைய சிஷ்யர்களில் தலைவனான ஒரு சேட்டுக்குத் தம்முடைய வரவைத் தெரிவிக்க வேண்டி முதல்வரான ஆஸ்தான வித்துவானை அவனிடம் அனுப்பினர். அவர் வந்து சேட்டைக் கண்டவுடனே ஒன்றும் பேசத் தோன்றாமல் திகைத்து நின்றார். ஏனென்றால் அந்த சேட்டு மிகவும் பருத்த உடம்பினர். அங்கே இருக்கிற வாசற்படி வழியாக அந்த சேட் போக்குவரத்து செய்ய முடியாது என்பது அவருடைய எண்ணம். ஆகவே இவன் எப்படி இந்தப் பங்களாவினுள்ளே வந்து சேர்ந்தான் என்கிற விசாரம், அந்த வித்துவான் மனத்தில் தோன்றிவிட்டது. அதனால் அவர் வாய் திறவாமல் திகைத்து நின்றார். அதுகண்ட சேட் 'நீர் யார்? எதற்காக வந்தீர்? ஏன் நிற்கிறீர்?' என்று கேட்க, அதற்கு வித்துவான் 'சேட்ஜி, அதைப்பற்றிப் பிறகு பேசுகிறேன்; என்னுடைய பெரிய சந்தேகத்தை நீ முதலில் தீர்க்கவேணும்; இந்த பங்களா கட்டின பிறகு நீ இதன் உள்ளே புகுந்திருக்க முடியாது; முன்னாடியே 'உன்னை உள்ளே, உட்கார் வைத்துத்தான் இதைக் கட்டியிருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். இப்படித்தானோ? வேறு விதமா? சொல்லாய் சீமானே!' என்றார்.

இது கேட்டவுடனே சேட்டுக்குக் கோபம் உண்டாயிற்று. ஏதோ சிறிது பருத்திருக்கிறோம் என்பதற்காக நம்மை இப்படிப் பரிகாசம் செய்கிறானே இவன் என்று சீறி, 'இந்தப் பிராமணனைப் பிடித்து ஓர் அறையில் அடையுங்கள்' என்று கட்டளையிட்டான். அப்படியே வித்துவான் அங்கே அடைக்கப்பட்டுக்கிடக்க, ஆசாரியர் வெகு நாழிகை எதிர்பார்த்தும், சென்ற வித்துவான் வரக்காணாமையால், இரண்டாவது ஆஸ்தான வித்துவானை அந்தச் சேட்டிடம் அனுப்பிவைத்தார். அவர்வந்து வாசலிலேயே செய்தி விசாரித்து நடந்ததைத் தெரிந்து கொண்டு சேட்டிடம் சென்று, சேட்ஜி எங்களில் ஒருவன் இங்குவந்து, ஏதோ தவறான கேள்வி கேட்டதாகத் தெரிகிறது. அவன் முழுமூடன்; ஏதோ ஒரு விதமாக இந்தப் பங்களாவுக்குள் நீ புகுந்தாகிவிட்டது; அதைப்பற்றி இப்போது ஏன் விசாரம்? நாளைக்கு நீ மரணமடைந்துவிட்டால் உன்னை எவ்வழியாலே வெளிப்படுத்துவது? என்கிற விசாரம் அன்றோ இப்

போது செய்யத்தக்கது. அதைவிட்டுவிட்டு 'நீ எப்படி உள்ளே புகுந்தாய்? என்கிற வீண் விசாரத்தை அந்த மூடன் எதற்காகச் செய்தான்?' என்ருர். அதுகேட்ட சேட் அளவிறந்த கோபம் கொண்டு அவரையும் உள்ளே அடைக்க உத்தரவு இட்டான். அவரும் அடைக்கப்பட்டுக்கிடக்க, ஆசாரியார் நெடுநேரம் எதிர்பார்த்துவிட்டு, மூன்ரும் ஆஸ்தான வித்துவானைச் சேட்டிடம் போக விட்டார்.

இவர்வந்து வாசலிலேயே முன்வந்த இருவருடைய செய்தியை விசாரித்து அறிந்து, சேட்டிடம் வந்து சேட்ஜீ எங்களில் இருவர் இவ்விடம் வந்து மிக மூடத்தனமான பேச்சுக்களைப் பேசினதாகக் கேட்டு மிகவும் வருந்துகிறேன். நீ மரணம் அடைந்தொழிந்த பிறகு, எப்படி உன்னை வெளியில் எடுத்துக்கொண்டு போவது என்கிற விசாரம் ஏதுக்கு? சுவர்களை எல்லாம் முற்ருக இடித்துவிட்டு எளிதில் கொண்டுபோகத் தடை என்ன? ஏதுக்கு வீண் விசாரம் கொண்டார் எங்கள் வித்துவான்? அந்த மகா மூடர்களை விட்டுத் தொலை'' என்ருர். அது கேட்ட சேட்டு இன்னமும் கோபம் பொங்கி, அவரையும் உள்ளே அடைக்க உத்திரவு இட்டான்.

அவரும் அடைபட்டுக் கிடக்க வெகு நேரம் பொறுத்து, ஆசாரியரால் அனுப்பப்பட்ட நான்காம் வித்துவான் ஓடிவந்து, முன்னேவந்த மூவருடைய செய்திகளையும் வாசலிலேயே விசாரித்து அறிந்து கொண்டு, சேட்டிடம் வந்து 'சேட்ஜி எல்லாச் செய்திகளையும் கேள்விப்பட்டேன்; என்ன அநியாயமான வார்த்தைகள்! இந்த மாளிகை எவ்வளவு மனேகரமாக இருக்கிறது! இதை இடித்து உன்னை வெளிப்படுத்துவது என்பது ஏன்! அந்தோ இது என்ன பேச்சு? எதற்காக இடிக்க வேண்டும்? நீ மாண்ட பிறகு உன்னைக் கத்தியினுல் சதைசதையாக அறுத்தால், ஒரு புட்டுக்கூடையில் வைத்து வெளியேற்ற முடியாதா? ஒரு கூடையில் முடியாது என்ருல், நான்கு ஐந்து கூடைதான் ஆகட்டுமே; நாலைந்து நிமிடத்தில் சிரமமின்றி அநாயாசமாக வெளியேற்றக் கூடியதாய் இருக்க, சுவர்களை இடிப்பதும் வாசற்காலைப் பேர்ப்பதுமான ஆலோசனைகள் என்ன அநியாயம்? என்ருர்.

சேட்டுக்குக் கோபம் தாங்க முடியவில்லை. நால்வர்க்கும் கொடுந்தொழில் புரியக் கட்டளையிட்டான். இப்படி நால்வரும் சென்று திரும்பி வராமற் போகவே, ஆசாரியர் நேராக ஓடிவந்து நால்வர் செய்தியையும் விசாரித்து அறிந்து திடுக்கிட்டுச் சேட்டிடம் ஓடிவந்து, 'அப்பா! உலகியல் ஒன்றும் அறியாத மூடர்களின் பேச்சைப் பொருட்படுத்தலாமோ நீ? உன்னைச் சதை சதையாக அறுத்துக் கூடையில் வெளியேற்றுவது என்பது எவ்வளவு அநீதியான பேச்சு? காதால் கேட்க முடியவில்லையே. நீ மாண்டு ஒழிந்த பிறகு இந்த மாளிகைதான் எதற்கு? சுவரை இடிப்பதும் வாசலைப் பெயர்ப்பதும்தான் எதற்கு? இந்த மாளிகையோடே உன்னைப் பொசுக்கிவிட முடியாதா? உனக்குப் பிறகு இந்த மாளிகையை ஆண்டு அனுபவிக்கத் தக்கவன் யாவன் உளன்?' என்று வாய் ஓயாமல் ஏதேதோ மேன்மேல் சொல்லிக்கொண்டே சென்ருர்! சேட்டுக்கு இன்னது செய்வதென்று தோன்றவில்லை. அது கிடக்க.

இந்த ஐந்து வித்துவான்களும் தர்க்க வியாகரண மீமாம்சைகளில் நிகரற்ற வித்துவான்களே. ஆனுல் இவர்களுடைய சாமர்த்தியமோ இப்படிப்பட்டதாய் இருக்கிறது. இக்கதைபோன்ற பல கதைகள் உள்ளன. இவற்ருல், வித்துவத்துக்கும் சாமர்த்தியத்திற்கும் சம்பந்தம் ஏதும் இல்லை என்பதே பெறப்படும். ஆகவே இராமபிரானுடைய சாமர்த்தியத்தைத் தனிப்பட அனுபவிக்க வேண்டியே, சமர்த்தன் யார்? என்னும் வினு எழுந்தது. இனி இராமபிரானுடைய சாமர்த்தியத்தைச் சிறிது அனுபவிப்போம்.

### இராமனிடத்தில் சாமர்த்தியம் இல்லையோ என்கிற ஐயம்:

இராமன் செய்திருக்கின்ற செயல்களுள், சிலவற்றை மேலெழ நோக்குங்கால் 'இவன் திறமையில்லாதவனே' என்று நினைக்க நேரும். ஆனுல் உட்புகுந்து ஆராய்ந்த அளவில் 'இராமனின் மிக்க திறமையாளன் இல்லை' என்று அறுதியிடல் ஆகும். இராமன் செய்த செயல்களுள் சிலவற்றை ஒவ்வொன்ருக எடுத்துக்கொண்டு ஆராய்வோம். சுக்கிரீவனேடு நட்புக் கொண்டு வாலியை வதைத்தமை இராமனின் ஒரு செயல். இராவணனை

வதைக்கச் சுக்கிரீவனை இராமன் துணை யாகக் கொண்டான் என்றும் சொல்லப்படு கிறது. உண்மையில் வாலி மிகச் சிறந்த பெருவீரன். இராவணனைத் தன் வாலி னால் சுற்றி அக்குளில் இடுக்கிக்கொண்டு, கடல்களின் பரப்பெல்லாம் திரிந்து கிட் கிந்தையில் வந்து உதறின வாலியின் வீரம் எளியதொன்றோ? அப்படிப்பட்ட பெரு மிடுக்கனான வாலியைத் துணை கொண்டால், இராவணனை மிக எளிதாகக் கொன்றொழிக்கலாம். இதுதான் சமர்த்தன் செய்யக் கூடிய காரியம். இதைவிட்டு வாலியை வதைத்தும், அவனிடம் அஞ்சி ஒளித்திருந்த சுக்கிரீவனைத் துணை கொண் டும் போந்தது, திறமையற்ற செயலல் லவா? என்று எளிதாகப் பலர் பேசிவிடுவ துண்டு. இஃது அறிஞர்கள் கூர்ந்து ஆராயத்தக்கது.

## மேற்படி ஐயத்திற்குத் தெளிவு :

இராவண வதம் செய்ய உண்மையில் இராமனுக்குத் துணை வேண்டுமோ? சுக்கி ரீவனை நட்புக் கொண்டது துணையை வேண்டியா? என்று சிந்தித்தல் வேண் டும். சரித்திரங்களைப் பார்க்கும்போது, இராவணன் ஆயிரம் தோள் வீரனான கார்த்த வீரியன்பால் பங்கப் பட்டவன். அவன் தானும் பரசுராமனிடத்தில் பங்கப் பட்டவன். அப் பரசுராமன் தானும் இராம னிடத்துக் கர்வபங்கம் அடைந்தவன் என் பதை நன்கறிகின்றோம். இத்தகைய பெரு வீரர் தலைவனான இராமபிரான் 'பொல்லா அரக்கனைக் கிள்ளிக் களைந்தான்' என்று ஆண்டாள் அருளிச் செய்தபடி, இராவ ணனைச் சிறு முயற்சியும் இன்றி எளிதாகக் கொன்று முடிக்க வல்லவன் என்பதில் ஐய மில்லை. இப்பெருவீரன் சுக்கிரீவனைத் துணை கொண்டான் என்பது பொருந்தாது. 'தீனபந்து' என்றும் 'ஏழை பங்காளன்' என்றும், முறையிடப்படுகிற தனது பெரும் குணத்தை உலகில் விளக்கிக் காட்ட வேண்டியே, இராமன் சுக்கிரீவனை நட்பாக ஏற்றுக்கொண்டான். பெருமாள் திரு மொழியில் 'இளையவர்கட்கு அருளுடை யாய் இராகவனே' என்று குலசேகர ஆழ் வார் விளித்ததும் இதனை வற்புறுத்தும். மூத்தவனான வாலியை வதைத்து இளைய தம்பியான சுக்கிரீவனுக்கு அருள்புரிந்த வனே! மூத்தவனான இராவணனை வதைத்து இளைய தம்பியான விபீஷணாழ் வானுக்கு அருள்புரிந்தவனே என்பது மாத்திரம் இதற்குப் பொருளன்று. இளைய வர்கள் என்பதற்கு இளைத்தவர்கள், வலி மையில்லாத எளியவர்கள் என்பதும் பொருள். வலிமையற்ற எளிய மக்களுக்கு அருள்செய்து காப்பதே பெருமாளுடைய இயல்பு. ஆதலால் இதற்குப் பொருத்த மாகச் சுக்கிரீவனை ஏற்றாரே ஒழிய, இரா வண வதத்திற்குத் துணை கொண்டார் என்பது நெஞ்சாலும் நினைக்கத் தகுதியற் றது. 'சிலையும் கணையும் துணையாகச் சென் றான் வென்றிச் செருக்களத்து' என்று திருமங்கையாழ்வார் அருளிச் செய்தபடி இராமனுக்குத் தனது சிலையும் கணையும் துணையே யல்லது வேறு எதுவும் துணை யன்று. ஆழ்ந்து ஆராயுங்கால், அந்தச் சிலையும் கணையும் கூடத் துணையல்ல. விபீஷணனை ஏற்றருளிய படலத்தில், சுக்கிரீவனையே நோக்கிப் பெருமாள் பணித்தபடி, அவனது திருவுள்ளம் (சங்கற்பம்) ஒன்றுதான், அவனுக்கு உற்றதுணை. இராவணனை வதைக்க இராமன் அளவற்ற தொல்லைகள் பட்ட தாகக் கதை காண்பதெல்லாம், அவனைத் திருத்தி ஆட்கொள்ளுதற்குப் பெருமாள் பல்லாற்றானும் இறுதி வரையில் முயன்று பார்த்தருளினான் என்பதனை உணர்த்துதற் கேயாம். அதனாலன்றோ 'இன்றுபோய் நாளைவா' என்று அருளிச் செய்தனன் இராமபிரான். ஆதலின் இராவணவதம் புரியச் சுக்கிரீவனை இராமபிரான் துணைக் கொண்டான் என்பது, பொருந்துமாறு இல்லை.

மேலும் இராமன் வாலியை வதைத்தது, சுக்கிரீவனது வேண்டுகோளுக்காகவே என்று கதைப்போக்கால் அறியக் கிடந்த தாயினும், உண்மை அங்ஙனமன்று. 'நல் லவர்களைக் காக்கவும் தீயவர்களை அழிக்க வும் நான் அவ்வப்போது தோன்றுகின் றேன்' என்று கீதையிற் கூறியபடி தீயவர் களை வதைக்க அவதரித்த பெருமாளுக்கு இது இயல்பாக அமைந்ததே யன்றி வேறன்று. இதைப்பற்றி மற்றோரிடத்து விவரிப்போம்.

## சமுத்திர சரணாகதியில் ஐயம் :

இனி இராமனது மற்றொரு காரியத்தை எடுத்துக்கொள்வோம். கடலைக் கடந்து இலங்கை செல்ல விரும்பியபோது இரா மன் கடலரசனை நோக்கிச் சரணாகதி செய்ததாகக் கதை காண்கிறோம். உலகில்

சரணாகதி செய்வது என்பது சாமர்த்தியம் இல்லாதவர் செய்யும் காரியமே அன்றி, சாமர்த்தியம் உடையவன் செய்யும் செயல் அன்று என்பதற்கு விளக்கம் தேவை யில்லை. மூன்று நாள் தவக்கிடை கிடந்த பின்பும் கடலரசன் முகம் காட்டாதே யிருக்க, மிக்க சீற்றத்தை வரவழைத்துக் கொண்ட இராமன் இளையோனை நோக்கி, வில்லையும் கொடிய அம்புகளையும் கொண்டு வருமாறு கட்டிளையிடுங்கால், 'இளையா! இக்கடல் தன்னை ஒரு மீன்படு குட்டமாக நினையாதே, என்னைச் சாமர்த்தியம் இல்லா தவன் என்று நினைத்து விட்டது' என்கிறார் பெருமாள். உண்மையில் சாமர்த்தியம் இல்லாதவன் செய்யக்கூடிய சரணாகதி யைத் தான் செய்துவிட்டு இங்ஙனே சொல்லத் தகுமோ? என்று பார்க்கவேண் டும். சரணாகதி செய்தது ஏன்? என்ப தைப்பற்றிப் பிறகு ஆராய்வோம். திறமை யில்லாதவன் செய்யும் செயலைச் செய்தான் என்பது கொண்டு இராமனைத் திறமை யில்லாதவன் என்று சொல்லத் தடை என்ன? என்பர்.

## பெருமாள் கடலரசனிடம் காட்டிய திறமை:

உண்மையில் இராமன் பெருந்திறமை யாளனே யல்லது திறமையற்றவன் அல் லன் என்பது, அங்கே அடுத்த கதையினால் நன்கு விளங்கும். அம்பு தொடுக்கப் புக்க வாறே கடலரசன் அஞ்சி நடுங்கி ஓடிவந்து நின்றதும், அவனுடைய வேண்டு கோளுக்கு இரங்கிப் பலகாத வழிக்கு அப் பால் இருந்த அவனது பகைவர்களை நொடிப்பொழுதில் வென்று வருமாறு அம் புக்குக் கட்டளையிட்டு அப்படியே நடத்தி வைத்ததும், காணும் இடத்துப் பெருமாளு டைய ஒப்புயர்வற்ற சாமர்த்தியம் எளிதிற் புலனாகுமே. ஆனால் திறமையற்ற செய லான சரணாகதியை இராமன் ஏன் செய் தனன்? என்கிற வினாவுக்கு விடையிறுக்க வேண்டுவது அவசியம் ஆகிறது. கேண் மின்.

## சமுத்திர சரணாகதியின் நுட்பம்:

பெருமாள் திருவவதாரம் செய்தது, தன் னுடைய ஒப்பில் பல் குணங்களை வெளியிடு தற்கே அன்றி, மற்றொன்றுக்காக அன் றென்பது சிறந்த பொருளாதலால், மிகச் சிறந்த ஒரு திருக்குணத்தை வெளியிடு வதற்காகவே இச்சரணாகதி அமைந்தது. இராமன் கடலரசனைச் சரணாகதி செய்த தான இச்செயல் எங்ஙனம் வந்து புகுந் தது என்பதைச் சிறிது ஆராயவேணும். பெருமாள் கடற்கரை வந்து சேர்ந்த போதே கடலைக் கடப்பது எங்ஙனம்? என்கிற ஆராய்ச்சி எழுந்தது. அப்போது விபீடணாழ்வான் வந்துசேர்வது முதலிய சில கதைகளினால் அந்த ஆராய்ச்சி மறைந் திருந்து, விபீடணனை ஏற்றபின்பு மீண்டும் அந்த ஆராய்ச்சி எழுந்தது. அப்போது பெருமாள் 'இவ்விஷயத்தில் நமக்கொன் றும் தெரியாது! விபீடணனைக் கேட்பது; அவன் என்ன உபாயம் தெரிவிக்கிறானோ அதுதான் கைக்கொள்ளத்தக்கது' என்று பணிக்க, கடல்கடக்கும் உபாயம் சொல்லும் பொறுப்பு விபீடணனுடையதாயிற்று. அவன் ஆலோசித்து 'பெருமாள் கடலைச் சரணம்புக வேண்டும்' என்றான். அது கேட்டுப் பெருமாள் 'எனக்கும் இவ்வுபா யமே சுவைக்கின்றது' என்று சொல்லி உடனே சரணாகதியில் புகுந்தார் என்று கதை காண்கிறோம்.

இங்கு விபீடணனைக் கேட்குமாறு சொல் லக் காரணம் என்ன? தன்னைவிட விபீட ணன் பேரறிவாளன் என்று திருவுள்ளமா? பிறரைக் கேட்டுச் செய்யவேணுமென்று கருத்தாகில் ஜாம்பவான் திருவடி போல் வாரான பேரறிவாளர்கள் இல்லையா? அவர்களைக் கேட்கலாமே. அவர்களையும் விட்டு விபீடணனைக் கேட்கக் கூறினது ஏன்? அந்த விபீடணன் தானும் பெருமாளுடைய பெருமையை உள்ளபடி அறிந்தவனாயிற்றே. பெருமாளைத் தான் சரணம் புக்கபோது 'ஸர்வ லோக சரண்யாய ராகவாய மகாத்மநே' என்று சொல்லி யிருக்கின்றானே. தான் நன் கறிந்த பெருமாளையா உவர்க்குழியை நோக்கிச் சரணாகதி செய்யச் சொல்லுவது? இவை பொருத்தமின்றி விழுந்திருக்கின் றனவே என்று ஐயுற நேரும். இவ்விடத்து நுட்பங்கள் கேண்மின்.

ஜாம்பவான் அனுமான் முதலான பேரறி ஞர்கள்—பழைய பக்தர்கள் —இருந்தாலும் (தத்துவத்திரயம் 151) ''அன்றீன்ற கன்றுக் குத் தாய் இரங்கி முன்னணைக் கன்றையும் புல்லிட வந்தவர்களையும் கொம்பிலும் குளம்பிலும் ஏற்குமாபோலே, பெரிய பிராட்டியாரையும் சூரிகளையும் விட்டுச் சிநேகித்துக்கொண்டு போரும்'' என்று பிள்ளை லோகாசார்யர் அருளிச் செய்த கணக்

கிலே, அன்று புதிதாக வந்து பணிந்த அடியான் பக்கலிலே சிறப்பான அன்பு காட்டுவதே, பெருமாளுடைய இயல்பாகும். பிராட்டி இராவணனைக் குறித்து உபதேசம் செய்யுமிடத்து, சரணாகத அன்பையே பெருமாள் பக்கலில் தான் நிலையிட்ட குண மாகக் கூறினள். அக்குணத்தை இராவண னிடத்தே காட்ட ஆசைப்பட்டிருந்த பெரு மாள், அது பெருவிட்டாலும், அவன் பின்னே பிறந்த விபீஷணனிடத்தாகிலும் அதனைக் காட்டாவிடில் தரிப்பு அரிதாகு மன்றோ. அன்பு என்பது இதுதானே! கன் றினிடத்துத் தாய்ப் பசு காட்டும் அன்பே (வாத்சல்யம்) அன்றோ, சிறந்த அன் பெனப்படுவது. முன்னணைக் கன்றுகளா கிய அனுமான் ஜாம்பவான் முதலானோரைத் தள்ளி, அன்று ஈன்ற கன்றாகிய விபீடண னிடத்தே சிறப்பான அன்பு விளைந்தது பற்றியே, அவன்து வார்த்தையில் பெரு மதிப்பு வைக்கத்தோன்றி, அவனை வழி முறை கேட்க வேண்டியதாயிற்று.

விபீடணனது கருத்து:

இனி, விபீடணன், ஸர்வலோகசரண் யனாகத் தானறிந்த பெருமாளைச் சமுத்திர சரணாகதி செய்யுமாறு எங்ஙனே சொன்னா னென்பது பற்றிக்கேண்மின்: உலகில் ஒரு நோய்க்குப் பலவகையான மருந்துக ளுண்டு; எல்லோரும் ஒரே மருந்தைச் சொல்லமாட்டார்கள். ஒவ்வொருவர் ஒவ் வொரு மருந்தைச் சொல்லுவர். எவனும் தன்னுடைய அநுபவத்தில் கைகண்ட மருந்தையே பிறர்க்கும் தெரிவிப்பது இயல்பு. அதுபோலவே விபீஷணாழ்வான் தனக்குச் சரணாகதியே பேறுபெறுவித்ததா கக் கைகண்டவனாதலால், உலகில் எந்தப் பேற்றுக்கும் இதுதான் உயர்ந்த (மருந்து) உபாயம் என்று துணிந்து, ஸர்வலோக சரண்யனான இராகவனுக்கு இது தகாது என்பதை மறந்து, சரணாகதி செய்வதே நலமென்று கூறினன்; அவன் கூறினாலும் பெருமாள் அதை மறுக்கலாம். 'திறமை யற்றவன் செய்யவேண்டிய சரணாகதியை சமர்த்தன் செய்தால் அதன் முடிவு என் னாகுமென்பதை உலகம் தெரிந்து கொள் ளட்டும்' என்கிற திருவுள்ளத்தினாலேயே தாம் ஏற்றுக்கொண்டு செய்து, முடிவையும் காட்டி நின்றார். ஆக, இதனாலும் இராம பிரானுடைய சிறந்த திறமை ஓங்கி நின்ற தாயிற்று.

—தொடரும்.

## உபய விபரம்

திருவாவடுதுறை ஆதீன மகாசந்நிதிதானம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள், தமிழ்நாடு தெய்விகப் பேரவையின் நிர்வாகக் குழுக் கூட்டத்திற்கு எழுந் தருளியபோது, 31—5—68 அன்று, திருச்செந்தூர் முருகப்பெருமானுக்குச் செலுத்திய உபயம் பற்றிய முழுவிபரம் விருமாறு:—

"தங்கக் கச்சப்புர சங்கிலியில் கோத்த மயூரத்தில் சுப்பிரமணியர் தங்கவேலாயுதத் துடன் பதக்கம் ஒன்றில் வெள்ளைக்கல் (140) சிகப்புக்கல் (72) நீலக்கல் (54) பதித்தது; 'திருவாவடுதுறை ஆதீனம்' என்று பொறிக்கப்பெற்ற தொங்கல் (21) உட்பட இருநூற்று எண்பத்து மூன்று (283) கிராம் எடையுள்ள உருப்படி ஒன்று".

திருச்செந்தூர் ஸ்ரீசுப்பிரமணிய சுவாமி தேவஸ்தானத்தின் நிர்வாக அதிகாரி திரு வி. சௌ. கோதண்டபாணி, B.SC., B.L., அவர்கள், இத்தகவலை அறிவிக்கின்றார்கள்.

—ஆசிரியர்.